# FB Postings

## ஜனவரி 2025 முகநூல் இடுகைகள்

jan 1 2025

உலகின் நடந்த எந்த புரட்சிக்கும் சற்றும் குறைவில்லாத, இன்னும் சற்று மேம்பட்ட புரட்சியை இந்திய விடுதலை செய்து காட்டியது.

‘வயது வந்த அனைவருக்கும் வாக்குரிமை’ universal adult franchise என்கிற பெரும் புரட்சியை உலகம் வியக்கும் வண்ணம் பிறந்த இந்திய குடியரசு நடத்திக் காட்டியது. இந்த நாட்டின் நாடாளுமன்றத்தை, சட்ட மன்றங்களை தேர்ந்தெடுக்க, அது வரை வாக்கு என்றால் என்ன என அறியாதவர்கள், அதை செலுத்தும் தன் பேரதிகாரத்தை - இந்தியாவின் மூலை முடுக்கெல்லாம் வாழ்ந்த மனிதர்கள் பெற்றனர். 1951-52 இந்தியாவின் முதல் பொதுத்தேர்தல், இந்திய வாக்காளப் பெருமக்கள் என்கிற பெரும் சாகசத்தை உலகிற்கு நிகழ்த்திக் காட்டியது.

விடுதலைச் சூழல், லட்சக்கணக்கான அகதிகள், காந்தி படுகொலை, சமஸ்தான பிரச்சனைகள், இன்னும் காஷ்மீர் , பொருளாதார குழந்தை நிலை- தளிர் நடைக்கே போராட்டம் என்கிற ஏராள தடைச் சூழலில், 1951-52க்கான வாக்காளர், தேர்தல் ஜனநாயகத்திற்கான பூபாளத்தை இசைத்தனர்.

முதல் முறையாக இந்தியா தன் ஒற்றை வாக்காளர் பட்டியல் என்கிற பெரும் சிந்தனையை அமுலுக்கு கொணர்ந்தது. 1947 ஆகஸ்டில் விடுதலை. 1947 செப்டம்பரிலிருந்து இந்த ஒற்றை வாக்காளர் பட்டியலுக்கான பெரும் வேலை ஆரவாரமின்றி, அரசியல் சப்தங்களின்றி, நிர்வாக நடைமுறை வேலையாக நடக்கத்தொடங்கியது.

இது ‘எம வேலை’ . சாத்தியமா, இந்தியா போகாத ஊருக்கு பயணமா, சாதிக்க முடியுமா எனக் கேட்டவர் எவருக்கும், எந்த விமர்சனத்திற்கும் பதில் சொல்லாமல் Constitutional Assembly Secretariat தன் பெரும் பணியை

செய்தது. எவர் மெச்சப்போகிறார், இனி வரும் காலத்து இந்தியர் எவர் இதையெல்லாம் அறிந்து, இவ்வளவு கஷ்டப்பட்டார்களா என பேசப் போகிறார் என எதையும் எதிர்பார்க்காமல் அரசமைப்பு அசெம்பிளி செயலகத்தில் பணிபுரிந்தோர் சாதித்தனர். இதுவும் புள்ளியல், வானியல் போன்ற அறிவியல் சாதனையாகவே எனக்குத் தோன்றுகிறது.

அனைத்து புரட்சிகளும் பாசி பிடித்து கறைபடிந்த காட்சிகளை தந்துள்ளன. அதனால் அப்புரட்சியை எவரும் திரும்பத் திரும்ப அசை போடாமல் இருப்பதில்லை. அதன் நோக்க மேன்மையை எடுத்துச் சொல்லாமல் இருப்பதில்லை. எந்த இலக்கும் அடைந்த பின் இலக்கு என்கிற அதன் ஈர்ப்பை இழந்துவிடும். இலக்கு என்பது ஈர்த்துக்கொண்டே இருப்பதற்குத்தான். அதை ‘மெக்கானிக்கலாக’ அடைந்து விட்டோம் என்று வேண்டுமானால் சொல்லிக்கொள்ளலாம். பின் அது இலக்காக இருக்காது. புதிய இலக்கு என வைத்துக்கொள்ள வேண்டும். இலக்கு என்பது ஈர்த்துக்கொண்டே இருப்பதற்குத்தான்.

இந்திய தேர்தல் ஜனநாயகம் என்கிற பெரும் அஸ்திவாரத்திற்கான ‘வயது வந்த அனைவரும் வாக்காளர்’ என்கிற புரட்சியும் , இப்போது தடுமாற்றங்களை, கறைகளை அப்பிக்கொண்டு நிற்கிறது. ஆனாலும் அந்த இந்திய புரட்சி உலகின் அனைத்து புரட்சிகர மாற்றங்களுக்கும் சற்றும் குறைவில்லாதது.

இந்திய அரசமைப்பு சட்டம் வருவதற்கு முன்னர் பிரிட்டிஷ் கொணர்ந்த 1935 இந்திய அரசாங்க சட்டமே இருந்தது. இந்த சமூகம் தன்னுள் வைத்திருந்த வேறுபாடுகள் அனைத்தையும் காட்டுகிற வண்ணமே , அது தன் வாக்காளர் பட்டியலை மெலிதாக வைத்திருந்தது. தனி வாக்காளர் தொகுதி கொண்டிருந்தது. கீழ் கண்ட அதன் வரிகளை கூர்ந்து படிப்பவர் அதை உணரமுடியும்.

No person shall be included in the electoral roll for a Sikh constituency , a Mohammadan constituency, an Anglo Indian Constituency or a European constituency unless he is a Sikh, a Mohammadan, an Anglo india, a European or Indian Christians

இப்படி தனி சமூக அடையாளங்களுடன்,சொத்து படைத்தவன் என்கிற பொருளாதார உயர் அடையாளங்களுடன் தான் விடுதலைக்கு முன்னரான குளறுபடி கொண்ட வாக்காளர் பட்டியல் இருந்தது. இப்படியான 1919 சட்டம், 1935 சட்டப்படி தான் இங்கு நீதி கட்சி, பின்னர் காங்கிரஸ், முஸ்லீம் லீக் ஆண்டனர். பல்வேறு நபர்கள் கனவான்களாக ஆட்சி மன்றங்களுக்கு சென்றனர்.

விடுதலை இந்தியா இதை அடித்து நொறுக்கியது. ஒரே வாக்காளர் பட்டியல் , வயது வந்த எவரே ஆனாலும், அவரின் சமூகம் என்ன என்ன சாதி, என்ன மதம், ஆணா பெண்ணா, பணக்காரரா ஏழையா, நிலப்பிரபுவா விவசாயத் தொழிலாளரா, முதலாளியா தொழிலாளியே, நீர் எவரே ஆனாலும் வரிசைக்கிரம பட்டியலில் இடம் பெறுவீர். வரிசையில் நின்று வாக்களிப்பீர் என அனைத்து ஏற்றத்தாழ்வுகளையும் நொறுக்கிய நிகழ்வு 1951-52 முதல் பொதுத் தேர்தலில் நடந்தேறியது.

இந்திய மக்கள் தொகையில் 49 சதத்தினர் வாக்காள பெருமக்கள் ஆயினர். 85 சதம் கல்லாதவர், ஏதும் இல்லாதவர். இவர்களை நம்பிய தேர்தல் ஜனநாயகம், அவர்களிடம் rational choice எதிர்பார்க்கலாமா என்கிற எல்லா கேள்விகளும் ஓரங்கட்டப்பட்டு, 17.3 கோடி மக்களை நம்பி அவர்களுக்கான எதிர்கால ஜனநாயக இந்தியா என்கிற பெரும் கனவை கட்டிட , இந்திய விடுதலை முன்னோடிகள் இந்த புரட்சிக்கு துணை நின்றனர்.

எவருக்காவது வயது சரியாக தெரியுமா, அதற்கு proof தருவார்களா, கணவர் பெயரை சொல்வாரா, ஊர் சமூகம் அழைக்கும் பெயரை சொல்வாரா, இன்னாரின் மனைவி, இன்னாரின் அம்மா என அடையாளப்படுத்திக்கொள்வாரா , கிராமப் பழக்கமென்ன என அனைத்து சவால்களையும் சமாளித்து 1947 செப்டம்பர்- 1950 மார்ச் என்கிற காலத்தில் , ஒரே வாக்காளர் பட்டியல் என்கிற நிர்வாக வேலையை முடித்துக்கொடுத்த அந்த பெயரழிந்து போன பெரும் சேவகர்களுக்கு வணக்கம். நன்றி

1947 ல் கே டி ஷா எழுதிய கடிதம், பிரசாத் ஏற்பு, மைசூர் கே பி மாதாவா என்கிற கணித அறிஞர் வழிகாட்டல், பி என் ராவ், எச் வி ஆர் அய்யங்கார், கே வி பத்மநாபன் என்பவர்களின் முன்னெடுப்புகளில் , தனி அடையாளங்களின் தனி வாக்காளர் பட்டியல் என்பது நீக்கப்பட்டு, ஒரே வாக்காளர் பட்டியல் என்கிற மகத்தான தேர்தல் ஜனநாயக கால்கோள் நிறுவப்பட்டது. இன்னும் இதற்காக வேலை பார்த்த ஏராளம், எப்படி வேலை பார்த்தனர், என்ன சவால்கள் என்பதை நன்றியுடன் அறிய விரும்பும் தமிழர்/ இந்தியர் பார்க்க வேண்டிய நூல்

How India Became Democratic by Ornit Shani. ஆர்னிட் ஷானிக்கு நன்றி.

இந்தியாவின் அரசமைப்பில் முதல் முறையாக சலுகை கொண்டவர் என்பதற்காக வாக்காளர் பட்டியலில் எவருக்கும் தனி இடம் கொடுக்கும் முறை ஒழிக்கப்பட்டது. எந்த அடையாளமும் இல்லா ஒரே

அடையாளமாக adult suffrage , citizen of India வகையில் வாக்காள பெருமக்கள் உருவாயினர்.

1928 நேரு அறிக்கை, அம்பேத்கர் சைமனுக்கு குறிப்பு, 1931 கராச்சி காங்கிரஸ் என கனவுகளை நினைவாக்கும் வேலைகள், 1947 செப்டம்பர் தொடங்கி நடந்தேறின. பெரும் கனவு ...

வாக்கு கிடைத்த பெருமை அறிந்தால் அதனை குறைத்து பங்கப்படுத்த மாட்டோம்.

1-1-2025

jan 4   2025

கடமை சார் சமத்துவ உலகு

Investments- returns என்பதன் பொருளாதார சிந்தனை- பார்முலாக்கள் பற்றி எனக்கு தெரியாது. ஆனால் அதன் வாழ்க்கைப் பாடங்கள் பற்றி கொஞ்சம் புரிதல் உள்ளது. கூர்ந்து  சமூக வாழ்க்கையை கவனிக்கும் எவருக்கும் இது புலப்படலாம்.

நூறு ஆண்டுகளுக்கு முன்னரெல்லாம், பெரும்பாலான இந்திய குடும்பங்கள், தங்கள் பெண் குழந்தைகள் மீதான இன்வெஸ்ட்மெண்ட்டை மிகக் குறைவாக வைத்திருந்தனர். அடுத்த வீட்டிற்கு போகிறவள்- கொஞ்ச படிப்பு போதும் என்றனர். சொத்திலும் பாரபட்சம் இருந்தது. பையன்கள் மீது கொஞ்சம் இன்வெஸ்ட்மெண்ட் செய்தனர். சொத்து மாற்றமும் நடந்தது.  எனவே பையன் மீதான எதிர்பார்ப்பும் , அக்குடும்பத்தார்க்கு அதிகம் இருந்தது. Material returns அல்லது spiritual returns பாசம் , மரியாதை போன்றவற்றை ரிடர்னஸ் ஆக அக்குடும்பத்தார் எதிர்பார்த்தனர்.  ரிடர்ன் கிடைக்காத குடும்பங்களில் முரண்களும் சச்சரவும் பெருகின.

காலமாற்றத்தில் ஆண் பெண் இருபாலருக்குமான இன்வெஸ்ட்மெண்ட் என்கிற குடும்ப உறவுகள் உருவாயின. இருபாலருக்குமான உரிமை வழி சமத்துவ குரல்கள் எழலாயின.  தன் மீதான இன்வெஸ்ட்மெண்ட் என்பதை ஆண் மட்டுமல்லாது, பெண்ணும் உணரும் வெளிக்கு இந்திய சமூகம் நகரத்துவங்கியது. இதன் வழி கூட்டுக்குடும்ப உடைவுகள், individualism , fatherhood- motherhood to self hood என்கிற உணர்தல்கள் பலப்படலாயின. கடமையிலிருந்து உரிமை மாற்றம் நோக்கிய பாதையிது.

இன்வெஸ்ட்மெண்ட் பெற்றவர்கள், தங்கள் மீதான  முதலீட்டை பெரும்பாலும் உரிமை கோரல் போராட்டங்களாக மாற்றினர். Right based society கட்டுவதில் கருத்தாக இருந்தனர். Lower investment கொண்டவர்கள் ‘கடமைக்கான காரியஸ்தர்களாக’ மாற்றப்பட்டனர். எவர் மீது இன்வெஸ்ட்மெண்ட் குறைவாக உள்ளதோ, அவர்கள் சமூகத்தின் உடல் உழைப்பாளர் என்ற நிலையைப் பெற்றனர். அங்கு கடமைகள் அதிகமாயின.

சமூக மாற்றங்கள் உரிமைப் போராட்டங்கள் வழியே அதிகம் நடக்கலாயின.  உரிமைகளுக்கு மட்டுமே முன்னுரிமை தரும் சமூக மாற்றத்தை மேற்கு நாடுகள் தங்கள் பார்வையில்  உலகம் முழுக்க கொண்டு சென்றன. அதற்கான இசங்களும் கொந்தளிப்புகளும்

பெருகலாயின. சமத்துவ சமூகத்திற்கான சிந்தனைகள் உரிமைசார் கருத்தியல் வழி கட்டப்பட்டன.

காந்தி இதன் விபரீதத்தை உணரத்தொடங்கினார். சமத்துவ சிந்தனையை 'கடமை சார்ந்த வழியில்' கட்டுதல் என்கிற பெரும் மாற்றை அவர் முன் வைக்கலானார். கடமைக்கான முன்னுரிமை என்பதை நடந்து காட்டுதல் மூலம் செய்யத்தொடங்கினார்- practical idealism, exemplariness என்கிற பார்வையை பலப்படுத்த முயற்சித்தார். கடமைக்கான பாதை மீது கவனம் செல்லட்டும் என்கிற வழியை ஓர்ந்து , பரிந்துரைக்கலானார். அனைவரும் உடல் உழைப்பில் ஈடுபடுதல் என்பதை பெரிதாக முன்வைத்து, தன்னை சுற்றி நின்றவர்களை கட்டாயப்படுத்தினார்.

உரிமைகளை உரக்கப் பேசிவிட்டு, கொஞ்சம் கூட உடம்பை அசைத்து எந்த உடல் உடல் உழைப்பையும் தன்னளவில் செய்யாமல், தாங்கள் ஒடுக்கப்பட்டவரின், உழைப்பாளரின் பிரதிநிதிகள் என ரிடர்ன்ஸ் எதிர்பார்த்தவர்கள் மீது அவருக்கு சந்தேகம் இருந்தது. அவர்கள் வழிகளின் மீது சந்தேகம் இருந்ததால், ஏற்கத் தயங்கினார். தொழிற்சங்கத்தில் இப்படி ரிடர்ன்ஸ் பெற்றவரில் நானும் ஒருவன் என்பதால், இதை என்னால் உணர முடிந்தது. இங்கு எனக்கான ரிடர்ன்ஸ் என்பது material gains அல்ல, மாலை மரியாதை என்கிற spiritual gains பற்றி குறிப்பிடுகிறேன்.

காந்தி பேசிய 'கடமை சார் சமத்துவ சமூகம்' என்கிற புரிதல் பொது புத்திக்கு போகவில்லை. தனக்கான இன்வெஸ்ட்மெண்ட்க்கு என்ன ரிடர்ன்ஸ் என்கிற 'உரிமை சார்' உலகாக, இந்தியா வெகுதூரம்ம்போய்விட்டது. இந்த ' உரிமைசார் உலகு' மேலும் மேலும் உரிமைசார் உலகாக உயர்த்தப்படும் போட்டி (competitive ) அதிகரித்து வருகிறது. இந்த போட்டியின் உஷ்ணம் அனைத்து நிறுவனங்களையும்- குடும்பம், தெரு, சாதி, மதம், அமைப்பு, கட்சி, ஆட்சி என- ஆட்டிவைத்து வருகிறது.

காந்தி நின்ற, பேசிய 'கடமை சார் முன்னுரிமை உலகு' என்கிற மாற்று எங்கும் தென்படா பெரும் சோகம் கவ்விப் பிடித்துள்ளது. சமூகம் தன்னை மீட்டெடுத்துக்கொள்ளுமா…

4-1-2025

jan 5

So said Nehru

French Writer Andre Malraux asked Nehru(1958)

What had been his greatest difficulty since independence?

Nehru replied

Creating a just state by just means- perhaps too  creating a secular state in a religious country

On Another occasion Nehru felt so

I do not seem to remember men being reminded in the same manner of Ramachandra and Satyavan and urged to behave like them. It is only the women who have to behave like Sita and Savitri, the men may behave as they like

jan 5  2025

2024க்கு நன்றி  2025ன் அருளை வேண்டி…

முகநூலில் சில நண்பர்கள் 2024ல் அவர்கள் வாசித்த பல நூல்களின் பட்டியலைத் தந்து வருகின்றனர். அவர்கள் அனைவருக்கும் நல்வாழ்த்துகள். அவர்களின் உழைப்பிற்கும் வணக்கம்.

2024ல் ஆங்கில நூல்கள் 64 யை படிக்க முடிந்தது. தமிழ் நூல்கள் 82 வாசிக்க வாய்ப்பு கிட்டியது. என்னைவிட தீவிர வாசிப்புத்திறன் வேகம் நிறைந்தவர் பலர் இருப்பர். எனது வாசிப்பு வேகம் சராசரித்தன்மை கொண்டது. எவர் முயற்சித்தாலும் முடியக்கூடிய ஒன்றே.  ஆங்கிலம் என்றால் சராசரி 60 பக்கங்கள் தினம், தமிழ் என்றால் 100 யைத்தாண்டி என்பது எனது பழக்கமாக சொல்ல முடியும்.  2024ல் சராசரியாக தினம் 100 பக்கங்கள் எனப் போனதைக் காண்கிறேன். 37000 பக்கங்களுக்கு மேல் என்கிற கணக்கை என் குறிப்பு காட்டுகிறது.

தினம் 3 மணி நேரம்  செலவிட முடிந்த எவரும், கடினமில்லாமல் ஆண்டிற்கு 100  நூல்களை வாசிக்க முடியும். அனைத்து நூலுமே 800-1000 பக்கங்கள் என எடுத்துக்கொண்டால், இந்த எண்ணிக்கை குறையக்கூடும். 300 பக்கங்கள் வரை, 500 பக்கங்கள் வரை என கலந்து நூலைத் தேர்வு செய்து வாசித்தால் ஓரளவு சாத்தியமாகலாம். நாம் வாசிக்கும் சில நூல்கள் 100 அல்லது 200 பக்கங்களுக்குள்ளும் இருக்கலாம்.  மேலே கூறிய நான் வாசித்த 146 நூல்கள், இப்படி பலதரப்பட்ட தன்மை கொண்டவை.

சராசரி வாரம் 4 நூல்களை வாசிப்பதாக என்னிடம் சொன்னவர்கள் உண்டு. பெரும் வாசிப்பாளர்கள் ஆண்டிற்கு 200க்கும் மேற்பட்ட நூல்களை படிக்க வேண்டியிருக்கலாம். அவர்களின் உள்வாங்கும் திறன் அடிப்படையில் வேகம் கூடலாம். குறையலாம்.

என் வாசிப்பு நூல்களை பார்க்கக்கூடியவர்க்கு எனது பன்முகத் தேர்வை புரிந்துகொள்ள முடியும்.  அரசியல் , வரலாறு அதிகமாக இருப்பதையும் காணலாம். வரலாற்று மாணவன் என்கிற ஸ்தானத்தில் இருந்துதான் என் பெரும்பாலான வாசிப்புக்களை அமைத்துக்கொள்கிறேன்.

வழக்கம்போல் 2024லும் காந்தி மிக அதிக அளவில் ஆக்கிரமித்துக்கொண்டார். மார்க்ஸ், அம்பேத்கர், நேரு, பெரியார்,

சோசலிஸ்ட்கள் வராமல் இல்லை. இந்த பட்டியல் எவருக்காவது உதவி எந்த நூலையாவது வாசிக்கும் ஆர்வத்தை தூண்டினால் மகிழ்ச்சி

3-1-2025

2024 படித்த ஆங்கில நூல்கள்

1. Mahatma Gandhi vol 8 - Sushila Nayar
2. Mahatma Gandhi The last phase vol 9 book 1 Pyarelal
3. Mahatma vol 9 book 2 Pyarelal
4. Mahatma Gandhi The last phase vol 10 book 2 - Pyarelal
5. The moral and political thought of Mahatma Gandhi Raghavan Iyer
6. Gandhi His life and thought Kripalani
7. Incidents in Gandhiji's Life Chandrashanker Shukla
8. Gandhi and Management Praveen Shukla
9. Gandhi A Life in Three Campaigns by M J Akbar
10. Mahatma Gandhi His Life and Ideas C F Andrews
11. Gandhi A patriot in South Africa by Josep j doke
12. Satyagraha in South Africa MKG
13. Gandhian Sarvodaya Thomas Vettickal
14. Faith and Freedom Gandhi in History by Mushirul Hasan
15. Gandhi the writer Bhavani Bhattacharya
16. Economist Gandhi Jaithirth Rao
17. Gandhian Engagement with Capital perspectives of J C Kumarappa
18. Gandhi's Economist Kumarappa mark Lyndley
19. Gandhian Political Economy B N Ghosh
20. Back to Basics JCK Reader edited P Bandhu
21. Gandhian Holistic Economics by Sashi Prabha
22. web of freedom JCK Venu Madhav Govind
23. Beyond Gandhian Economics by B N Ghosh
24. Hind Swaraj M K Gandhi
25. Hind Swaraj Sathish Kumar

26. Rereading of Hind Swaraj politics Ethics and self. Edited by Rajeev Bhargava
27. Reflections on Hind Swaraj edited by siby k Joseph and Bharat mahoday
28. Gandhiji on Hind Swaraj and select views of others National Gandhi Museum
29. Jinnah vs Gandhi by Roderick Mathews
30. Gandhi's Hinduism - Jinnah's Islam by M J Akbar
31. Jinnah : successes failures role in history by Ishtiaq Ahmed
32. Gokhale by Deogirikar
33. The Mahatma A Marxist symposium
34. Gandhi Marx and India Pradhan Prasad
35. Karl Marx The Story of His Life Franz Mehring
36. why Marx was right? Terry Eagleton
37. Communist Manifesto Marx Engels
38. How to Read Karl Marx Ernst Fischer
39. The Life of Lenin Louis Fischer
40. Five Essays on Philosophy Mao
41. Modern Capitalism and other essays Paul sweezy
42. Glimpses of world History by Nehru
43. The unforgettable Nehru by Tandon
44. Nehru and Indian constitutionalism n r Madhava Menon
45. The Evolution of pragmatism in India Intellectual Bio of Ambedkar by Scott Stroud
46. Ranade Gandhi and Jinnah By BR Ambedkar
47. The Legacy of Dr Ambedkar by D C Ahir
48. My days with Dr Ambedkar by Savita
49. Becoming Babasaheb Aakash Rathore
50. Indian Socialism v k r v Rao
51. Lohia by Indumati Kelkar
52. Yusuf Meherally by Madhu Dandavate
53. M N Roy the man and his ideas
54. Dange A fruitful life By Gopal Bannerjee

55. CPI our party’s growth in TN by C S

56. History of Communist movement by CPM vol 4

57. Blowing up India Philip spratt

58. India’s Experiment with Democracy - Elections by S Y Quraishi

59. The Idea of Democracy Sam Pitroda

60. The political Economy of New India Raju Das

61. A brief history of equality Thomas Piketty

62. The Man who remade India P V Narasimha Rao by Vinay satpathi

63. South vs North Neelakandan

64. Sketches from memory vol 1 Margaret Chatterjee

படித்த தமிழ் நூல்கள் 2024

1. கார்ல் மார்க்ஸ் அறிவுப் பயணத்தில் புதிய திசைகள் மார்செல்லோ முஸ்ட்டோ

2. மார்க்சிற்கு ஆதரவாக அல்தூசர்

3. சோசலிச சீனாவும் முதலாளித்துவ சீனாவும்

4. பொது உடைமைதான் என்ன ராகுல்ஜி

5. அரசியல் அறிவின் அடிப்படைகள்

6. உலக நிதி மூலதனம் பிரபாத் பட்நாயக்

7. கண்ணியமான பொருளாதார வளர்ச்சி அமித் பாதுரி

8. சமத்துவம் நோக்கிய இயக்கம் சுருக்கமான வரலாறு தாமஸ் பிக்கெட்டி தமிழில் ரவி

9. ஜே சி குமரப்பாவின் கருத்துக் களஞ்சியம் மா பா குருசாமி

10. டிராக்டர் சாணி போடுமா குமரப்பா

11. சர்வோதயம் மா பொ குருசாமி

12. கிராம இயக்கம் குமரப்பா தமிழில் குமுதினி

13. ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம் தமிழில் ரா. வேங்கடராஜுலு

14. சுயராஜ்ய சாஸ்திரம் வினோபா

15.  சுயராஜ்யம் யாருக்கு    சிங்காரவேலர்

16. வேதங்களின் நாடு இ எம் எஸ்

17. நான் அறிந்த காந்தி   பிஷர்

18. காந்தியை அறிதல்    தரம்பால்

19. தோழர் காந்தி   ஆர் பட்டாபிராமன்

20. காந்தியைக் கண்டுணர்தல்

21. செயலறம்    சித்ரா பாலசுப்பிரமணியன் தொகுப்பு

22. தீனபந்து ஆண்ட் ருஸ்   தி ஜ ர

23. மகாதேவ தேசாய் காந்தியின் நிழல்   விப்ரநாராயணன்

24. மகாத்மாவும் மகாகவியும் கல்கி

25. நான் ஏன் எழுதுகிறேன்   கே பி நாகராஜன்

26. எதற்காக எழுதுகிறேன் க நா சு

27. காலனியத் தொடக்கக்காலம் 1500-1800 ஜெயசீல ஸ்டீபன்

28. தமிழகத்தில் தொழில் -சாதி   ஜெயசீல ஸ்டீபன்

29. தமிழகத்தில் சாதியை கண்டுபிடித்தல் 1871க்கு முன்னர்    ஜெயசீல ஸ்டீபன்

30. தமிழகத்தில் சாதி உருவாக்கமும் மாற்றமும்    கரோஷிமா சுப்பராயலு

31. பிராமண போஜனமும் சட்டிச் சோறும்  பேரா ஆ.சி

32.  சிந்துவெளி திராவிட அடித்தளம்    ஆர் பாலகிருஷ்ணன்

33. இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு கில்பர்ட் சிலேட்டர்

34. திராவிட இன அடையாளமும் வெகுமக்களிய அரசியலும்   நரேந்திர சுப்பிரமணியன்

35. பாரத ஜனசபை    பாரதியார்

36. ராஜாஜி ஒரு தேசிய சகாப்தம்

37. பாகிஸ்தான் அம்பேத்கர் நூல்தொகை 15

38. சூத்திரர் வரலாறு அம்பேத்கர்

39. என்றும் தமிழர் தலைவர் (பெரியார்)

40. மார்க்சியம் பெரியாரியம் தேசியம்    எஸ் வி ஆர்

41. தமிழர் தலைவர் தந்தை பெரியார் சாமி சிதம்பரனார்

42. பெரியார் கே பி நீலமணி

43. பெரியார் ஆகஸ்ட் 15 எஸ் வி ராஜதுரை

44. நெஞ்சுக்கு நீதி கலைஞர் வால் 1-1

45.  நெஞ்சுக்கு நீதி வால் 1- 2

46. சாதியும் நிலமும் காலனியமும் மூலதனமும்  சுபகுணராஜன்

47. பெண் ஏன் அடிமையானாள்?  பெரியார்

48. திராவிட கேள்வியும் தேசிய பதிலும் பிரபாகரன்

49. பரிதிமாற் கலைஞர் - வி சு கோவிந்தன்

50. நீட்ஷே -மலர் மன்னன்

51. நா வானமாமலை -தோதாத்ரி

52. கம்பராமாயணம் உரைநடையில்  அறிவொளி பகுதி 1

53. கம்பராமாயணம் உரைநடையில் பகுதி 2  அறிவொளி

54. இராமன் பன்முக நோக்கில் அ ச ஞா

55. கம்பன் கண்ட தமிழகம்   சாமி சிதம்பரனார்

56. ந. பிச்சமூர்த்தியின் கலை மரபும் மனித நேயமும் - சுந்தர ராமசாமி

57. அவஸ்தை நாவல் யு ஆர் அனந்தமூர்த்தி

58. மகாபிராமணன் தேவுடு நரசிம்ம சாஸ்திரி

59. கருக்கு பாமா

60. சங்கதி பாமா

61.  கொத்தைப்பருத்தி   கி ரா

62.  விடுதலை     அசோகமித்ரன்

63.  ஓர் இலக்கியவாதியின் அரசியல் அனுபவங்கள்     ஜெயகாந்தன்

64. அக்னி நதி   குர் அதுல் ஐன் ஹைதர்

65. இதுதான் இஸ்லாம் மௌலானா மௌதூதி

66.  இலக்கிய இயக்கங்கள் மங்கையர்க்கரசி

67. சரீரம் ஒரு நரகம் சச்சிதானந்தன் கவிதைகள்

68. டி கே சி வரலாறு சண்முகநாதன்

69.  திராட்சைகளின் இதயம் நாகூர் ரூமி

70. இருபது நூற்றாண்டு தமிழ்க்கவிதை   ஞானி

71.  சல்மான் ருஷ்டி  சொக்கன்

72. பாரதியும் தமிழகமும் தூரன்

73. கலை என்றால் என்ன வ ரா

74. தமிழ் தொண்டாற்றிய சான்றோர்கள் வரதராஜன்

75. இலக்கியம் கட்டுரைகள்   மு இராகவையங்கார்

76.  தமிழில் இலக்கிய வரலாறு சிவத்தம்பி

77. நெடுவழி விளக்குகள் ஸ்டாலின் ராஜாங்கம்

78. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் வரலாற்று குறிப்புகள் (50வது ஆண்டில் வந்த ஒன்று )

79. இ க இயக்கத்தின் பெருமைமிகு வரலாறு சுர்ஜித்

80. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி 80 ஆண்டுகள் ஏ பி பரதன்

81.  இ க க 80 ஆண்டுகள் இலட்சியப்பயணம் தேவபேரின்பன்

82.  முற்கால இந்தியா ரொமிலா தாப்பர்

jan6

They said so on Nehru

Jawaharlal derives strength from the people. He likes vast crowds. Personal popularity leads him to believe that the people are satisfied with his administration- this conclusion, however, is not always justified.

- Acharya Narendra Deva 1949

As the years rolled, the very foundations on which Nehru's prestige and reputation rested began to weigh him down. At one time, he had a solution to every difficulty, today he faces a difficulty in every solution

- R K Laxman 1959

jan 7

ஆய்வாளர் குஹாவின் India After Gandhi பெரிய நூல். குறிப்புகள் சேர்த்தால் 940 பக்கங்கள் செல்லும் உயரமான புத்தகம்.

விடுதலைக்குப் பின்னரான இந்தியாவின் வரலாற்று நகர்வுகள் அல்லது முக்கிய கட்டங்களின் தொகுப்பாக இந்நூலை பாவிக்கலாம். குஹா கடுமையான உழைப்பை நல்கியுள்ளார். 2007க்கு பின்னரும் மோடி ஆட்சி வரை 'அப்டேட்' செய்து 2023ல் ரூ 1200க்கு பதிப்பை கொணர்ந்துள்ளனர்.

ஏராள விவரங்களும், விவரிப்புகளுமாக குஹா நூலை பின்னிப் போகிறார். நேரு கால இந்தியா மட்டுமே 400 பக்கங்களுக்கு செல்கிறது. இந்திரா, ராஜிவ் என வரிசையாக, வலது அரசியல் எழுச்சி-மோடியின் வரவு வரை நூல் விரிந்து செல்கிறது.

நூலை 'லீனியர்' முறைமையில் தான் குஹா கட்டமைக்கிறார். இன்னும் சற்று ஆழமாக எழுதியிருக்கலாமோ என எனக்கு முதல் 300 பக்கங்களை வாசித்துக்கொண்டிருந்தபோது தோன்றியது. நேரு-படேல் -பிரசாத் -ராஜாஜி - ஆசாத்- கிருபளானி போன்ற காந்தி கால முன்னணி தலைவர்கள் உறவு விரிசல்கள் ஆழமாக பேசப்படவில்லை. காந்தியர்களாக தொடர்ந்து வெவ்வேறு கோணங்களில் பயணிக்க முயன்ற வினோபா, குமரப்பா கருத்துக்களும் பெரிய அளவில் இடம் பெறவில்லை.

குஹா அம்பேத்கர் குறித்தும் ஆழமாக பார்த்து இந்நூலில் விவாதிக்காதது ஏன் எனத் தெரியவில்லை. இந்து மகாசபா, ஆர் எஸ் எஸ் தலையீடுகள் குறித்தும் இன்னும் வீச்சாக பேசியிருக்கலாமோ எனத் தோன்றியது. இவையெல்லாம் எனது முதல் 300 பக்க வாசிப்பின் ஊடாக மனதில் பட்டவைதான். முழுமையாக குறிப்புகள் நீக்கிய 800 பக்கங்களை தொடும்போது இந்த உணர்வுகள் மாறலாம் அல்லது திடப்படலாம். பார்க்கலாம்.

இங்கு குஹாவின் பகுதி மூன்றில் இடம் பெறும் மய்யத்தை உலுக்குதல் அல்லது அசைத்துப் பார்த்தல்- தெற்கு தந்த சவால் சற்று சுவையானது. நம் வாழிடப் பகுதி என்பதால், நன்றாக உள்வாங்க முடியும். அதில் தமிழகத்தில் திமுக மற்றும் கேரளத்தில் கம்யூனிஸ்ட்கள் உருவாக்கிய தாக்கம் குறித்து குஹா சொல்கிறார். குஹாவின் இப்பகுதியை வாசித்தபோது தோன்றியவை:

பாராளுமன்றம் பன்றித்தொழுவம் என்றெல்லாம் லெனின் பேசியிருந்தாலும், இந்திய கம்யூனிஸ்ட்கள் தேர்தல் பங்கேற்பு என்கிற mainstream பாதைக்கு வந்தனர். லெனினின் அரசும் புரட்சியும் என்பதில் சொல்லப்பட்ட திசைக்கு மாற்றான புதிய தங்களின் சோதனைகளில் துணிச்சலாகவே இந்திய கம்யூனிஸ்ட்கள் இறங்கினர். 1948 ரணதிவே சோதனைகளை தூரவைத்து விட்டு- தலைமறைவு -இரகசிய வழி - ஆயுதபுரட்சி -பாட்டாளி சர்வாதிகாரம் வழிகளை விட்டு விட்டு, நாடாளுமன்ற சோதனைகள், அமைதி வழி ஜனநாயக போராட்டங்கள் என அவர்கள் தங்களை தகவமைத்துக்கொண்டனர்.

1957ல் கேரளா சட்டமன்றத்தில் கம்யூனிஸ்ட்கள் இ எம் எஸ் தலைமையில் ஆட்சிக்கு வந்ததை உலகமே வியந்து பார்த்தது. இப்படி ஒரு மாநில அளவிலான பரப்பில் தேர்தல் மூலம் மக்களின் ஆசியை பெற்று கம்யூனிஸ்ட்கள் ஆட்சிக்கு வரமுடியும் என்கிற புதிய சோதனையை விடுதலை இந்தியாவின் ஜனநாயகம் உலகிற்கு காட்டியது. அது கம்யூனிஸ்ட்கள் தங்கள் திட்டத்தில் எழுதி வைத்து நம்புகிற புரட்சியாக இல்லாமல் இருக்கலாம். ஆயுதமில்லா அமைதி வழியில் தேர்தல் பாதையில் கம்யூனிஸ்ட்களும் மக்களின் பேராதரவை பெறமுடியும் என்கிற புதிய உலக வரலாறை 1957 ல் சிபிஅய் உருவாக்கியது.

பெரியார் தலைமையில் திக வில் தொடர்ந்து பயணிக்க முடியாத நிலையில், அண்ணா தலைமையில் திமுக தேர்தல் பங்கேற்பு என்கிற துணிச்சலான முடிவை எடுத்தனர். திராவிட நாடு என்கிற பிரிவினை முழக்கத்தை கைவிடாமலேயே தான் மக்களிடம் சென்று தங்களுக்கான சட்டமன்ற, நாடாளுமன்ற பிரதிநிதிகளை மக்களின் ஆதரவுடன் பெற்றனர். சீன யுத்தம் மற்றும் நாடாளுமன்ற சட்டமன்ற அனுபவங்களில் பிரிவினைக்கான காரணங்கள் அப்படியே இருந்தாலும், கோரிக்கையை கைவிடுவதாக பகிரங்கமாக அறிவித்தனர்.

கோரிக்கையின் புனிதம் என்பதைவிட, திமுகவின் இருப்பு என்கிற மிக முக்கிய விவாதத்தில் அண்ணா தன் தம்பியர்களை பலியிடாமல் காத்து மிக சாமர்த்தியமான அரசியலை முன்னெடுத்தார். 1967 ல் அண்ணா ஆட்சி எனத் துவங்கி இன்றுவரை 55 ஆண்டுகளுக்கு மேலாக திமுக அதிமுக என தக்கவைத்துள்ளனர். அண்ணா எடுத்த அன்றைய முடிவால் பெரியாருக்கும் பெரும் பீடம் கிடைத்தது. சோவியத் லெனினால் மார்க்ஸ் உலகளாவி பரவினார் எனில், அண்ணாவால் பெரியார் பரவினார் என புரிந்து கொள்ள முடியும்.

குஹாவின் இந்த southern challenge என்கிற பகுதியை, நூலை முழுமையாக படிக்க முடியாதவர் தனியாக படித்துப் பார்க்கலாம்.

7-1-2025

jan8

குஹாவின் ‘காந்திக்கு பின்னரான இந்தியா ‘ துணுக்குத் தகவல்கள் ஏராளம் தருகிற நூல். துணுக்குச் செய்திகள் சுவையானவை மட்டுமல்ல, சம்பந்தப்பட்டவர்களின் மேதாவிலாசத்தையும் காட்டும். குஹா கொடுக்கும் ஓரிரு தகவல்களை இங்கு தரப்பார்க்கிறேன்.

ஜெனரல் திம்மையா, அலகாபதில் அப்போது இளம் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இராணுவ அதிகாரி . அலகாபாதில் இளம் அதிகாரியாக சினிமா தியேட்டருக்கு வருகிறார். சரியான ஆண்டை குஹா குறிப்பிடவில்லை. குறைதான். ஊரில் மூத்தவராக, செல்வாக்கு மனிதராக மதிக்கப்படும் மோதிலால் நேருவும் படம் பார்க்க வருகிறார். என்ன படம், என்ன தியேட்டர் போன்ற விவரங்கள் இல்லை. இருவரும் சந்திக்கின்றனர். மோதிலால் கேட்கிறார் என்னப்பா திம்மி , இந்த பிரிட்டிஷ் யூனிபார்ம் எப்படியிருக்கு? இளம் திம்மையா ‘Hot’ என்கிறார். கழட்டிவிட்டு, உங்களைப் போன்றவருடன் வந்துவிடவா என ஆலோசனை கேட்கிறார் திம்மையா. மோதிலால், உன் போன்ற திறமையானவர் நல்ல பயிற்சியுடன், விடுதலை இந்தியாவிற்கு தேவைப்படும் எனக் கூறி, திம்மையா எந்த guilty ம் இல்லாமல் தொடர உளவியல் உதவியை செய்கிறார்.

அடுத்து ஒரு செய்தி ராஜாஜி- நேரு உரசல் குறித்து. 1950களின் இறுதியில் காங்கிரசிற்குள் ஒரு எதிர் அணி இருந்து, நேரு அரசை விமர்சித்து நேர்படுத்த வேண்டும் என்கிற கருத்தை ராஜாஜி வைக்கிறார். கட்சி அவர் கருத்தை ஏற்கவில்லை. அவரிடம் தன் பாராமுகத்தையும் அதிகரித்தது. ராஜாஜி பழுத்த தன் 80 ஆம் வயதில், சுதந்திரா என்கிற எதிர்கட்சியை தொடங்குகிறார். சுதந்திரா காங்கிரசை கடுமையாக விமர்சிக்கலானது. நேருவை தெய்வமாக்கும், தனிமனித வழிபாட்டில் சிக்கியிருக்கும் காங்கிரசை மீட்பீர் என ராஜாஜி சொல்லலானார். ‘ரீஆக்‌ஷனரிகளின்’ புகலிடம் ராஜாஜி கட்சி என காங்கிரஸ், கம்யூனிஸ்ட்கள் தாக்கினர். நேருவிடம் ராஜாஜியின் சுதந்திரா கட்சி பற்றி என்ன நினைக்கிறீர்கள் என கேட்கப்பட்டது. நேரு சுவையான பதிலைச் சொன்னார். இப்போதெல்லாம் one liner என பலர் பேசுவதற்கு பல ஆண்டுகள் முன்னரே நேரு இப்படியான ‘ ஒன் லைனரை’ பயன்படுத்தியதைக் காண்கிறோம். நேரு சொன்னது oh Rajaji , he is the old testament, but I am the new testament .

‘இந்தியா சீனா பாய் பாய்’ என்கிற முழக்கம் நிற்க ஆரம்பித்து ‘இந்தியா சீனா பை பை ‘ என்கிற அரசியல் கோபதாபங்கள் எழ ஆரம்பித்த நேரம். தலாய் லாமா அடைக்கலம், திபெத் பிரச்சனை சூடு

பிடித்த நேரம்.சீனா பிரிட்டிஷ் ஏற்பாடான மக்மோகன் கோடு என்கிற எல்லை பிரிவினையை ஏற்க முடியாது என சொன்னதுடன் செயலில் இறங்கிய நேரம். தொடர்ந்து நேரு சூ என் லாய் கடிதங்கள், பேச்சுவார்த்தைகள் நடந்து வந்த நேரம். ஜனசங்கிகள் நேருவிற்கு நெருக்கடி கொடுத்த நேரம். கம்யூனிஸ்ட் இயக்கத்திலும் சீன ஆதரவு குரல்கள்- வேறுபாடுகள் வலுத்து வந்த நேரம்.

சூ இந்தியாவிற்கு வந்து பேச்சுவார்த்தை நடத்திக்கொண்டிருக்கிறார். கருப்புகொடிகளை ஜனசங்கம் காட்டிக்கொண்டிருந்தது. நேரு உரிய மரியாதையுடன் சூ என் லாயை கௌரவித்தார். சூ வும் டாக்டர் ராதாகிருஷ்ணன், பந்த், மொரார்ஜி என பலரையும் சந்தித்து உரையாடினார். மொரார்ஜி சந்திப்பு குறித்த சுவையான உரையாடலை குஹா தந்துள்ளார். மொரார்ஜி அப்போது நிதி மந்திரி.

மொரார்ஜியிடம் சூ கேட்ட முதல் கேள்வி- திபேத்திய அதிருப்தியாளர்கள் இங்கு வந்து ஊர்வலம் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இந்திய மண் இடம் கொடுக்கலாமா?

மொரார்ஜி ஆமாம், இந்தியாவில் தினம் எவராவது கருத்தரங்கம், ஆர்ப்பாட்டம் நடத்திக்கொண்டுதான் இருக்கிறார்கள். இப்ப பாருங்கள் இங்கு அல்ஜீரியர்கள் நடத்துகிறார்கள். எப்பவாவது இந்தியர் கூட நடத்துவார்கள். இங்கு வரும் மக்கள் தங்கள் கருத்துக்களை சொல்லும் சுதந்திரம் இருக்கிறது. திபேத்தியர்களும் சொல்கிறார்கள். சீனாவிற்கு எதிராக சதி செய்ய இங்கு நாங்கள் இடம் கொடுப்பதில்லை. கருத்து சொல்ல இடமுண்டு.

மொரார்ஜி மேலும் சொன்னார்- சூ உங்களுக்கு தெரியாததா, லெனின் இங்கிலாந்தில் போய் தங்கி சுதந்திரமாக தன் கருத்துக்களை வெளியிடவில்லையா, அங்கு அவரை தடை செய்யவில்லையே.

சூ என் லாய் புரிந்து கொண்டிருக்கலாம். நேரு மட்டுமல்ல, அவரை சுற்றி நிற்கும் சகாக்களும் உலக அரசியலை உற்றுப் பார்க்கிறவர்கள், புத்தி கூர்மையும் கொண்டவர்கள் என்று.

வேறு ஒரு நூலில் ( பெயர் நினைவிற்கு வரவில்லை) படித்த நினைவு. பாண்டுங் பஞ்ச சீல தீர்மானம் சூ என் லாய் , நேரு உள்ளிட்டவர் ஏற்பிற்கு பின் draft செய்யப்பட வேண்டும். மாநாட்டு காலைப் பொழுதிலேயே சூ விடம் நீங்கள் செய்கிறீர்களா என கேட்கப்பட்டது. சூ இல்லை நேரு செய்யட்டும் என்கிறார். இந்திய தரப்பால் எழுதப்பட்டு, நேரு சில நிமிடங்களில் பார்த்து சரிசெய்து நகலை தட்டச்சு செய்து சூ விடம் கொடுத்து விட்டனர். சூ அதன் சீன மொழிபெயர்ப்பு

செய்யப்படவேண்டும் என்கிறார். ஒருவேளை மாவோவிற்கு அனுப்பி ஒப்புதல் பெற நினைத்திருக்கலாம். எனக்கு தெரியவில்லை..ஊகம் மட்டுமே.

மாலைவரை சூ தரப்பில் செய்தி இல்லை. இந்தியத் தரப்பு சென்று கேட்டதற்கு, சீனத் தரப்பில் மொழி பெயர்ப்பு இன்னும் முடியவில்லை என்றனராம். என்னப்பா இந்த சிறு தீர்மானத்திற்கே இவ்வளவு நேரமா - அவ்வளவு கடினமா சீன மொழி என்று சொல்லி, சுவையான ஜோக் ஒன்றை நேரு அப்போது உதிர்த்தார். பாவம் மார்க்ஸ், இவர்கள் மொழியில் எப்படி பாடுபடுத்தியிருப்பார்களோ, சுற்றி நின்றவர் அனைவரும் சிரிக்காமல் இருந்திருக்க முடியுமா

8-1-2025

jan 9

டேவிட் மக்லெல்லன் குறித்து இந்திய மார்க்சியர்கள் அறிந்திருப்பர். பிரிட்டன் மார்க்சிய ஆய்வாளர் மக்லெல்லன், மார்க்ஸ் மற்றும் மார்க்சியம் குறித்து விரிவான நூல்களை எழுதியவர். அவர் தேடியபடி கிடைத்த தகவல்களை எந்த hush up- ஒளிவு மறைவின்றி தந்த ஆய்வாளரில் ஒருவர்.

Life of Marx போலவே Thoughts of Marx குறித்தும், எவ்வளவு புரிய வைக்க முடியுமோ அவ்வளவிற்கு சிரமப்பட்டு தன் எழுத்து உழைப்பை தந்தவர் டேவிட் மக்லெல்லன். அவரது நூல்கள் ஓரிரண்டு இணையத்தில் இருந்ததை பார்த்துள்ளேன். வாங்குவது என்பது ஆர்வம், மனத்துணிவு மற்றும் பணப்பையை பொறுத்து அமையலாம்.

டேவிட் மக்லெல்லனின் Karl Marx என்கிற ஒரு சிறு நூல் - 110 பக்கங்கள்- பெங்குவினால் பிராங் கெர்மோட் எடிட் செய்து வந்துள்ளது. டேவிட் எழுதிய நூலின் 40 ஆம் ஆண்டை நாம் எட்டியுள்ளோம். இந்த சிறுநூலின் விலை 10 டாலர் . இந்தியாவில் ஸ்டிக்கர் ஒட்டி கையடக்க சிறிய நூலுக்கே ரூ 550 விலை 2024ல் வைத்திருந்தனர்.

மக்லெல்லனின் இந்த நூல் எடிட் செய்யப்பட்ட நிலையில், மார்க்சின் வாழ்க்கை குறித்து வெறும் 17 பக்கங்களில், அதே நேரத்தில் அடர்த்தியுடன் பேசுகிறது. மார்க்சின் சிந்தனை - எழுத்துக்களின் சாரத்தை 70 பக்கங்களில் , சொற்செட்டுடன் பிழிவாக தருகிறது. அடுத்த இயலாக மார்க்சின் புகழ் குறித்த 20 பக்கங்கள். இறுதிப் பகுதியில் மார்க்சை வாசிப்பதற்கான குறிப்பை தருகிறது. அப்பகுதி மிகச் சிறிய பகுதி.

ஒரே நூலில் மார்க்ஸ் வாழ்வு சிந்தனை குறித்த சாரம் ஏற்றப்பட்டுள்ளது என்பது சிறப்பு என்றாலும், மார்க்சை வேறு பல நூல்கள் வழி ஓரளவாவது அறிமுகம் பெறமுடியாதவர்கள், இந்நூலினுள் செல்ல முடியுமா என்கிற கேள்வி என்னிடம் இருக்கிறது. மார்க்ஸ் குறித்த பொது புத்தியில் இருக்கக்கூடிய விமர்சன fixations சிலவற்றிற்கு இந்நூலில் வாசிக்கக்கூடியவர் பதிலைப் பெறலாம். அதேபோல் மார்க்ஸ் விவாதத்திற்கு அப்பாற்பட்டவர்- absolute- இறுதியானவர் என்கிற நம்பிக்கையை, டேவிட் மக்லெல்லன் வாசிப்பவருக்கு தர மாட்டார். Critical appreciation வகைப்பட்ட நூலாக புரிந்துகொள்ள வேண்டும்.

டேவிட் மக்லெல்லன் எடுத்தாண்டு மார்க்சை விளக்கும் சில மேற்கோள் வரிகளை இங்கு தந்துள்ளேன்.

Man has a life both in the political community, where he is valued as a communal being, and in civil society, where he is active as a private individual, treats other men as a means , degrades himself to a means, and becomes a play thing of alien powers

The criticism of religion ends with the doctrine that man is the highest being for man, that is, with the categorical imperative to overthrow all circumstances in which man is humiliated,enslaved, abandoned, and despised

Communism as completed naturalism is humanism and as completed humanism is naturalism…the society completes the essential unity of man and nature, it is the genuine resurrection of nature, the fulfilled naturalism of man and humanism of nature இங்கு மாரல்- நெறி குறித்தும் மார்க்ஸ் பேசுவார். காந்தி அநேகமாக மார்க்சை சந்திக்கும் புள்ளியாக எனக்குத் தோன்றும் இடமிது.

டேவிட் மக்லெல்லன் சொல்கிறார் Marx never used the expression ‘ historical materialism’.

The question whether objective truth can be attributed to human thinking is not a question of theory but a practical question என மார்க்ஸ் சொல்லுமிடத்தில் காந்தியையும் நாம் சந்திக்கலாம். வியாக்கியானமல்ல, மாற்றுவது என மார்க்ஸ் அழுத்தமாக சொல்லுமிடமிது.

மார்க்சியம் பொருளாதார நிர்ணயவாதம் என்கிற விமர்சனத்திற்கு டேவிட் மக்லெல்லன் பதிலை எங்கெல்ஸ் வைத்து சுட்டிக்காட்டுவார்.

Marx and I are ourselves partly to blame for the fact that the younger people sometimes lay more stress on the economic side than is due to it…. இருந்தாலும் மார்கஸ் அப்படி புரிந்துகொள்வதற்குரிய எழுத்தை கொடுத்துவிட்டும் சென்றுள்ளார் என மக்லெல்லான் பேசுகிறார்.

வரலாறு மனிதர்களால், அவர்கள் விரும்பக்கூடிய வகையில் இல்லாவிட்டாலும், உருவாக்கப்படுகிறது . வரலாறு தானாக எதையும் செய்வதில்லை என்பதை மார்க்ஸ் அழகாக சொல்வார்

History does nothing, it does not possess immense riches, it does not fight battles. It is men, real, living men, who do all this, who possess things and fight battles. History is nothing but the activity of men in pursuit of their ends. …Men make their history, but they do not make it just as they please, they do not make it under circumstances chosen by themselves, but under circumstances directly encountered, given, and transmitted from the past.

வர்க்கம் பற்றிக்கூட அவர் மேலான புரிதலை தந்ததாக மக்லெல்லன் சொல்கிறார்.

The proletarian mass is already a class in opposition to capital but not yet a class for itself. ..The proletariat is not yet sufficiently developed to constitute itself into a class…

The separate individuals form a class insofar as they have to carry on a common battle against another class; otherwise they are on hostile terms with each other as competitors.

முதலாளிகளுக்கு இடையே உள்ள போட்டி என்பது போலவே தொழிலாளர்க்கு இடையே உள்ள போட்டி- industrial army குறித்தெல்லாம் மக்லெல்லன் நூல் தொட்டுக்காட்டுகிறது. மார்கஸ் கையாண்ட முறையியல் குறித்தும் மக்லெல்லன் கொஞ்சம் சொல்கிறார். லசேல் போன்றவர் மார்க்சை Hegel turned economist and a Ricardo turned socialist என மதிப்பிட்டதை குறிப்பிடுகிறார்.

உழைப்பு மதிப்பு -உபரி மதிப்பு கோட்பாட்டை விளக்கிவிட்டு மக்லெல்லன் சொல்வது Marx’s economic theories are models, more or less removed from empirical reality, and they merely describe tendencies என்கிற புரிதலைத்தான்.

மக்லெல்லன் இந்நூலில் சொல்லித்தருவது

Marx’s work was unfinished one..Marx had not offered any hard and fast conclusions-only a methodology. Marxian dialectics in particular was open- ended

9-1-2025

jan 10

50 ஆண்டுகளுக்கு முன்னர்..

மனித பண்பாளர் நேருவும், காஷ்மீரத்து சிங்கமாக கருதப்பட்ட ஷேக் அப்துல்லாவும் 11 ஆண்டுகளுக்கு பின்னர் டெல்லியில் 1964 ஏப்ரலில் சந்திக்கின்றனர். கண்கள் பணிக்க இருவரும் ஆரத்தழுவிக்கொள்கின்றனர்.

1953ல் அப்துல்லாவின் நடவடிக்கைகளால் அவர் சிறை வைக்கப்பட்டார். நேரு தன் மனதிற்கு வலி தரும் செயலை செய்யவேண்டியதானது என சொல்லிக்கொண்டிருந்தார்.

அப்துல்லா அவர்களின் மகன் பரூக் அப்துல்லா அன்று இளைஞராக ஜெய்ப்பூரில் மருத்துவம் படித்துக்கொண்டிருந்தார். 1955ல் ஜெய்ப்பூர் சென்ற நேரு பரூக்கை சந்தித்தார். தன் கல்லூரியில் தன் தந்தையை துரோகி என முத்திரை குத்தி பலரும் தன்னை வருத்தமுறச் செய்கிறார்கள் என்கிற மன வேதனையை பரூக் நேருவிடம் தெரிவித்தார். உன்னையும், குடும்பத்தாரையும் நன்றாக பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறது என நேரு அவரிடம் நம்பிக்கையை தந்தார்.

ராஜஸ்தான் மாநில அரசாங்கத்திற்கு தெரியப்படுத்தி, பரூக்கிற்கு தொந்தரவு இல்லாமல் பார்த்துக்கொண்டார்.

ஷேக் அப்துல்லா மீது அப்போது ஜனசங்கம் கடுமையான விமர்சனங்களை வைத்துக்கொண்டிருந்தது. இடதுசாரிகளும் அப்துல்லா , ஏகாதிபத்திய சதி வலையில் சிக்கியவர் எனக் கருதி வந்தனர். அப்துல்லா விடுதலையும், தொடர்ந்த பேச்சுவார்த்தைகளுமே காஷ்மீர் பிரச்சனைக்கு உதவும் என இரு குரல்கள் வலுவாக வெளிப்பட்டன. ஒன்று ராஜாஜி, மற்றவர் ஜேபி.

அப்துல்லா விடுதலை அறிவிப்புடன், அவருக்கு நேருவின் அழைப்பு சென்றது. அது நட்பு அழைப்பு, அலுவல் சார்ந்ததை விட மேலான தோழமை அழைப்பு. அப்துல்லா நீ வந்து தீன் மூர்த்தி இல்லத்தில் சில நாட்கள் தங்கிப் போ. உன்னுடன் இருக்க விழைகிறேன் என்கிற பொருள்படும் அழைப்பது. அப்துல்லாவும் ஊர் மக்களை பார்த்துவிட்டு உடன் வருகிறேன் என்கிற செய்தியை அனுப்பினார்.

அப்துல்லாவிற்கு ஊர் கூடி நாயகனுக்குரிய வரவேற்பை தந்தது. நேரு சிறையில் வைத்த கேள்வி வந்த போதெல்லாம், சகோதர கருத்து வேறுபாடுகள் அவ்வளவே, என் தோழர் நேரு, அவர் மீது எனக்கு எந்த

வருத்தமும் இல்லை. நேருவை, ஜேபியை, ராஜாஜியை சந்தித்து தீர்வு கொணர முயற்சிப்பேன் என பதில் கூறினர் அப்துல்லா.

நேரு இருக்கு போதே தீர்வு வரவேண்டும், இல்லையேல் அவரைப் போன்ற புரிதலும் நியாய உணர்வும் கொண்ட காந்தி கால மனிதர் கிடைக்க மாட்டார் என அப்துல்லா வெளிப்படையாக தெரிவித்தார்.

நேரு அப்துல்லா சந்திப்பு என அறிந்த ஜனசங்கம் தீனதயாள், வாஜ்பாயி தலைமையில் பெரும் பேரணியை நடத்தி 370 யை நீக்கு, இந்தியாவுடன் காஷ்மீர் மற்றுமொரு மாநிலம் என்கிற அந்தஸ்தில் வை என்கிற கோரிக்கைகளை முழங்கினர்.

நேருவுடன் டெல்லியில் 5 நாட்கள் தங்கி அவரின் விருந்தை ஏற்றார் அப்துல்லா. ஜேபியை சந்தித்து நன்றி தெரிவித்தார். நேரு காலத்திலேயே தீர்வை எட்டிவிடுவது நல்லது. அது காஷ்மீர், இந்தியா, பாகிஸ்தான் என மூன்று stakeholders க்கும் ஆரோக்கிய தீர்வாக அமையும் என ஜேபி கருதினார். காந்தியை ராஜ்காட்டில் வணங்கி, வார்தா சென்று வினோபா ஆசியை பெற்றார் அப்துல்லா. அங்கிருந்து மதராஸ் வந்து ராஜாஜியுடன் தங்கினார்.

ராஜாஜி காஷ்மீர் பிரச்சனை குறித்து எழுதிக்கொண்டிருந்தார். ராஜாஜியின் சில வரிகளை குஹா எடுத்தாண்டுள்ளார். அதை தந்துள்ளேன்

Try and think fundamentally. Are we to yield to the fanatical emotions of our anti Pakistan groups? Go on hating, suspecting each other..we shall ruin ourselves for ever if we go on doing this..if we continue this arms race based on an ancient grudge and the fears and suspicions flowing from it.

ஏன் ராஜாஜியை இன்றைய வலது அரசியல் அதிகார மய்யம் எடுத்துக்கொள்வதில்லை என மேற்கண்ட வரிகள் உணர்த்திவிடும். அப்துல்லா ராஜாஜியுடன் விவாதித்துவிட்டு, ராஜாஜி பார்முலாவை நேருவிடம் எடுத்துச் செல்வேன் என தெரிவித்தார்.

அப்துல்லாவை பாகிஸ்தானின் அயூப்கான் அழைத்து சந்தேக விதையை தூவச் செய்தார். ஜன சங்கிற்கு இது அவல் போல் ஆனது. ராஜாஜிக்கு மினு மசானி வேண்டுகோள் விடுத்தார்- நேருவிற்கு கடிதம் எழுதச் சொல்லி. ஆனால் ராஜாஜிக்கு தயக்கம். என்னப்பா சில நேரம் நேரு ராஜாஜியா, பதில் சொல்ல வேண்டாம் விட்டுவிடுங்கள் என்பார், வேறு நேரம் ராஜாஜிக்கெல்லாம் பதில் சொல்லனுமா என்பார். நான் லால் பகதூருக்கு எழுதுகிறேன் என, சாஸ்திரிக்கு எழுதினார் ராஜாஜி.

சாஸ்திரியும் எந்த அதீத கொள்கை நிலையையும் எடுக்க வேண்டாம் என ராஜாஜி அப்துல்லாவிற்கு சொல்ல வேண்டினார்.

பத்திரிகையாளரை சந்தித்த அப்துல்லாவிடம், என்ன ஆன்மீக உரையாடலுக்கு வினோபாவையும், நடைமுறை அரசியல் உரையாடலுக்கு ராஜாஜியையும் பார்த்தீர்களா என்கிற கேள்வி வந்தது.

மசானிக்கு ஜனசங்கம் மீது சந்தேகம்- கம்யூனிஸ்ட்கள் மீது கோபம். ராஜாஜிக்கு எழுதினார், நேருவும் சாஸ்திரியும் நேர்மையாக முயற்சிப்பார்கள்- ஆனால் காங்கிரசில் வலது இடது என்கிற இழுவைகளின் குழப்பம் இருக்கிறதே, என்ன செய்வது…

இந்திய அரசியல் அமைப்பு உருவானதைப் பற்றி பெரும் கதைகளை 7000 பக்கங்களுக்கு மேல் பல வால்யூம்களில் நமக்கு தந்து சென்றுள்ள பி சிவராவ் ( அரசமைப்பு முதல் நகலை உருவாக்கிய பி என் ராவ் சகோதரர்) ராஜாஜிக்கு மனம் நொந்து எழுதினார்

There is a clear attempt both from the cabinet and in parliament to prevent Nehru, prime minister from coming to terms with Sheik Abdullah…

காஷ்மீர் பிரச்சனைக்காக எவ்வளவு அரும் பெரும் நேர்மையாளர்கள் தங்கள் மூளையை கசக்கிக்கொண்டுள்ளனர் என பார்க்க முடிகிறது. இன்றும் பிரச்சனை தீர்ந்தபாடில்லை. புதிய முடிச்சுகளும் இறுக்கப்பட்டே வருகின்றன.

10-1-2025

Inputs India After Gandhi Guha

jan 10

தொழிற்சங்க தலைவர் தோழர் பீட்டர் எழுதிய திருச்சபையும் தொழிலாளரும் நூல் வெளியீட்டு விழா சென்னை புத்தக கண்காட்சியில் நல்லுவின் (நற்கரத்தால்) நாற்கரத்தால் ஜன 9, 2025 அன்று நடந்தது.

பங்கேற்றமைக்காக பீட்டர் , ஹேமாவிற்கு 'கௌதமன் புத்தரான கதை- கன்யூட் ராஜ்' , எனக்கு 'தென் இந்திய வரலாறு நீலகண்ட சாஸ்திரி ' நூலையும் வழங்கினார். விழாவில் தொழிற்சங்க தலைவர்கள் ராதா உள்ளிட்ட ஏஅய்டியுசி பொறுப்பாளர்களும், நடராஜன் , ராஜாமணி , மில்டன் உள்ளிட்ட என் எப் டி இ பொறுப்பாளர்களும் சிறப்பு செய்தனர். எழுத்தாளர் ,தொழிற்சங்க தலைவர் அக்களூர் இரவி விழாவை நேர் செய்து, இரவு உணவும் வழங்கினார். நினைவில் நிற்கும் எளிய நிகழ்வு.

தோழர்களுக்கும் தோழமைக்கும் என் அன்பும் நன்றியும்.

jan 12

Ornit Shani ஹைபா பல்கலை ஆசிய மய்ய பேராசிரியை. இஸ்ரேலில் கடந்த 60 ஆண்டுகளாக வளர்ந்து வரும் பல்கலைக்கூடமது.

ஆர்னித் இந்திய ஜனநாயகம் குறித்த ஆய்விற்கான மிக முக்கிய பங்களிப்பை தன் நூலான How India Became Democratic- citizenship and the making of universal franchise மூலம் செய்துள்ளார்.

பெங்குவின் 2018ல் வெளியிட்ட புத்தகம். ஆர்னித் பெரும் உழைப்பை நல்கியுள்ளார். இழை இழையாக விவரங்களை தேடி எடுத்து நெய்துள்ளார். விடுதலை இந்தியாவின் வழி நாடாளுமன்ற ஜனநாயகம்- வயது வந்தோர் வாக்குரிமை என முன்னவர்கள் முடிவெடுத்தது அற்புதமானது. அதை நடைமுறைக்கு கொணர பி என் ராவ், அய்யங்கார், எஸ் என் முகர்ஜி, கே வி பத்மநாபன், சுப்பிரமண்யன், அபிடி, பிரிஜ் பூஷன் போன்றவர்கள் CAS - Constituent Assembly Secretariat என்கிற செயலகத்தில் ஆற்றிய அளவிட முடியா அற்புத பணியை இந்நூல் அங்குலம் அங்குலமாக விவரிக்கிறது.

இந்திய அரசியல் அமைப்பு சட்டம் உருவாக்கப்பட்டு ஏற்கப்படும் நவம்பர் 1949க்கு இரு ஆண்டுகளுக்கு முன்னரே, நீண்ட அனுபவம் நிறைந்த பி என் ராவின் பெரு முயற்சியால், சக உயர் அதிகாரிகளின் துணையால் , இந்தியா அதுவரை காணாத ‘ஒரே வாக்காளர் பட்டியல்’ - single universal voters list என்கிற பெரும் சாதனையை இந்தியா கண்டது எப்படி என பக்கந்தோறும் முழு ஆதாரங்களுடன் இந்நூல் பேசுகிறது.

நூலின் கட்டமைப்பை மேலே செய்தி இழை, கீழே ஆதார text-correspondence எனச் செல்கிறது. வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் இந்தியாவில் வரையறுக்கப்பட்ட ஆட்சி அதிகாரம் என்கிற பெரும் புரட்சிக்கு- நடைமுறையாக்கம் என்கிற உருவை இந்த CAS என்கிற, இன்றைக்கு இந்தியா மறந்து போன அந்த முகங்கள் இரவு பகலாக பணியாற்றின. அவர்களின் உழைப்பு, ஜனநாயக பரவலாக்க கடமை, நாட்டின் எதிர்காலம் குறித்த திட நம்பிக்கை, இண்டு இடுக்கெல்லாம் கேட்பாரற்று கடந்த ஒவ்வொரு மனிதரையும் தேடித்தேடி வாக்களர் பட்டியலில் இடம் பெற வைத்தது.

என்ன சாதி, குலம் என்ன, மதமென்ன, பாலினம் என்ன, ஏழையா, சொத்துள்ளதா, படிப்பென்ன, மொழியென்ன என எந்தக் கேள்வியும் இல்லாமல் , 21 வயதா-குடிமகனா -அப்போது ஒரே வாக்காளர் என்கிற சமத்துவ மதிப்பில், வேறுபாடின்றி ‘ஒரே வாக்காளர் பட்டியல்’ என்கிற மாபெரும் அரசியல் உரிமை சமத்துவம் உருவாக்கப்பட்டது. இந்த

உருவாக்கத்தில் அவர்கள் எதிர்கொண்ட நடைமுறை சிக்கல்கள் எவை, அவற்றை அவர்கள் எப்படி நிர்வாகரீதியாக தீர்க்க முயற்சித்தனர் என்பதை ஆர்னித் அடுக்கியுள்ளார்.

எது இந்தியா, எவர் இந்தியர் என்கிற கேள்விக்கான நடைமுறையாக்கத்தை territorial- citizenship என்கிற அம்சங்கள் தீர, அரசியலமைப்பு அசெம்பிளி- செயலகம்- ஆங்காங்கே மக்களின் குரல்கள் என முக்கூட்டு செயலாண்மை உதவியது.

இந்நூலின் மய்ய காலப்பகுதி 1947-49 என்கிற இரண்டே ஆண்டுகள்தான். ஆனால் அவை இந்திய ஜனநாயகத்தை நடைமுறைக்கு கொணர நாற்று நடுதல்- உழவுக்காலம் போன்ற ஒன்றானது.

இப்படி பலரின் உழைப்பால் உருவானதுதான் 'இந்தியாவின் பெரும் ஜனநாயக ஆரம்பம்' . இந்த விழிப்புணர்வு கைமாற்றி கொண்டு செல்லப்படவில்லை. கொஞ்சம் இருப்பதையும் ஆரவார அக்கப்போர் அரசியல் சூழலில் தொலைத்துக்கொண்டிருக்கிறோம். விவாதம் என்ற பெயரில் குழாயடி சண்டையை கண்டுகொண்டு வருகிறோம்.

இந்திய எம் எல் ஏ, எம்பி க்களுக்கு குறைந்தது இந்திய அரசியல் அமைப்பு குறித்த மூன்று மாத கால பயிற்சி அவரவர் தாய்மொழியில் கட்டாயமாக்கப்படவேண்டும். அவர்களுக்கு மட்டுமல்ல அனைத்து பதிவு செய்யப்பட்ட அரசியல் கட்சிகளில் உள்ள அனைத்திந்திய மாநில மாவட்ட பொறுப்பாளர்களுக்கும் இந்த பயிற்சி என்கிற ஏற்பாடு வேண்டும்.

பிரதமர் மற்றும் அவரின் காபினட், முதல்வர் அவரின் அமைச்சரவை சகாக்கள் ஆகியவர்களுக்கு இந்திய ஜனநாயகத்தின் பல்வேறு அம்சங்கள், நீதித்துறை , பிற நிறுவனங்கள் குறித்த 6 மாத பயிற்சி இருப்பது கட்டாயம் என ஆக்கப்பட்டால் என்ன என மனது கேள்வி எழுப்பி, கற்பனை செய்து பார்க்கிறது. மக்களின் செல்வாக்கு என்பது ஆள நுழையும் முதல் சாளரம். அது மிக அடிப்படையானது. ஆள அதுவே போதும் என்பது இந்திய ஜனநாயகத்தின் ஆரோக்கியத்திற்கு போதாது எனத் தோன்றுகிறது.

ஆர்னித் சானி நல்லதோர் ஆய்வை நமக்கு கொடுத்துள்ளார். வாய்ப்புள்ளவர் வாசித்து பாருங்களேன்…

12-1-2025

jan 13

புத்தக கண்காட்சி சென்னையில் நிறைவடைந்துள்ளது. ஆயிரக்கணக்கில் மக்கள், திருவிழாவிற்கு வருவது போல் வந்து சென்றுள்ளனர். ஆயிரக்கணக்கான எழுத்தாளர்கள், நூற்றுக்கணக்கான பதிப்பகங்களின் வழியே தங்களை கணக்கிட்டு சென்றிருப்பர். சிலருக்கு பெரும் கதாநாயக பிம்பம் சற்று கூட்டப்பட்டிருக்ககூடும். பதிப்பாளர்களுக்கும் மொத்த விற்பனையைக் காணக்கூடிய நாட்கள் அவை.

ஒரே ஒரு நாள் கண்காட்சிக்கு , நல்லுவின் நாற்கரம் கொணர்ந்த தோழர் பீட்டர் எழுதிய நூல் வெளியீட்டிற்கு செல்ல வாய்ப்பு கிடைத்தது. அந்நிகழ்வு குறித்து பதிவுகள் வந்துவிட்டன. தோழர்களுக்கு நன்றி.

நான் பல ஸ்டால்களில் பார்த்த அளவில் என் கண்ணில் அதிகம் பட்ட ஆங்கில நூலாக ஆனந்த் டெல்தும்டே எழுதிய' Iconoclast A Reflective Biography of Dr Babasaheb Ambedkar ' யை பார்த்தேன். நல்ல அம்சம். மதுரை சர்வோதய இலக்கியப்பண்ணையில் காந்தி புத்தகங்கள் மட்டும் இல்லவே இல்லை. அங்கிருந்தவர்க்கு இது பற்றிய எந்த உணர்வும் கூட இல்லை. பெரும் வீழ்ச்சி. வழக்கம் போல் பெரியார் நூல் ஸ்டால்களில் இளைஞர்கள் நிற்பதை பார்க்க முடிந்தது. பப்ளிகேஷன் டிவிஷனில் கூட எனக்கு ஏமாற்றமே. இம்முறை டெண்டுல்கர் வால்யூம்கள் கூட கண்ணில்படவில்லை. சிபிஅய்யின் பிபிஎச் ஏராள வெவ்வேறு நிறுவனங்களின் ஆங்கில collections வைத்திருந்ததைக் காணமுடிந்தது.

டெல்தும்டேவின் இந்த 'அய்க்னோகிலாஸ்ட்' நூல் அம்பேத்கர் வாழ்க்கை வரலாற்றில் காணப்படும் சில இடைவெளிகளை சற்று நிரப்ப முன் வந்துள்ளது. சில துணிச்சலான வெளியிடல்களையும் கொண்டுள்ளது. அவையெல்லாம் ஆரோக்கியமாக விவாதப் பொருளாகுமா எனத் தெரியவில்லை.

ஆகாஷ் ரதோர் நூல் கூட முதல் பகுதி மட்டுமே வந்துள்ளது. இரண்டாவது பகுதி வந்தால்தான் எப்படிப்பட்ட hush up கள் உடைக்கப்படுகின்றன எனக் காணமுடியும். அம்பேத்கர் குறித்த பல நூல்கள் முழுக்க முழுக்க hagiography வகைப்பட்டவையாக இருக்கின்றன, கீர் போன்றவர்கள் தவறானவற்றை தந்துள்ளனர், அவரின் வாழ்க்கை சரியான ஆதாரங்களுடன் இட்டு நிரப்பப்படவேண்டிய இடைவெளிகளை கொண்டுள்ளன என்பதை

ரதோர், டெல்தும்டே போன்றவர்கள் உணர்ந்து சில இடைவெளிகளை நிரப்ப முயற்சித்துள்ளது வரவேற்கத் தகுந்த போக்குதான்.

அசோக் கோபாலின் a part apart நூலும் அம்பேத்கர் இலக்கியத்திற்கு பங்களிப்பை செய்துள்ளதை சிலர் பதிவு செய்துள்ளனர். அசோக்கை படித்த பின் என் உணர்வை வெளிப்படுத்த முடியும்.

ஒருவகை பிரதிபலிப்பை செய்ய டெல்தும்டே , தலைப்பில் சுட்டிக்காட்டியபடி செய்ய எத்தனித்துள்ளார். பல்வேறு முரண்களை சுட்டிக்காட்டவும் அவர் தயங்கவில்லை. கம்யூனிசம் குறித்து மற்ற எவரையும் விட தான் அதிகம் படித்தவன் என்கிற டாக்டர் அம்பேத்கரின் உரிமை கோரலை, இந்த நூலில் மட்டுமல்ல, முன்பேயே கூட அவர் கேள்விக்கு உட்படுத்தினார். இந்நூலிலும் அதைச் சொல்லியுள்ளார்.

ராணடே காந்தி ஜின்னா ஒப்பீட்டில், ராணடே குறித்து அவர் செய்த மதிப்பீட்டில் காணப்படும் எதார்த்த முரண்களையும் டெல்தும்டே சுட்டிக்காட்ட தயங்கவில்லை. அம்பேத்கருக்கு காந்தி குறித்து bias இருந்ததையே என் வாசிப்பு எனக்கு உணர்த்திக்கொண்டிருக்கிறது. காந்தி மீது அம்பேத்கர் வைத்த விமர்சனங்களை அப்படியே absolute ஆக எடுத்துக்கொள்ளும் பொது புத்தி தான் நிலவுகிறது. டெல்தும்டேவிற்கும் காந்தி bias இருப்பதை பார்க்க முடிந்தது.

இடது கோணத்திலிருந்து அவரின் பார்வை சார்பு இருப்பதால், கீர் செய்த அதீத ‘சாவர்க்கர் கொண்டாட்டம் ‘ என்பது அறவேயில்லாமல் டெல்தும்டே பார்த்துக்கொண்டுள்ளார். எம் சி ராஜா மூஞ்சே உடன்பாடு என எவர் தேடினாலும் எளிதில் இணைய வழி பெற்று விட முடியும். ஆனால் டெல்தும்டே சற்று தொட்டுக்காட்டி செல்லும் மூஞ்சே - அம்பேத்கர் உடன்பாடு முழு பிரதி கிடைத்து விடாது.

அம்பேத்கர் அருகில் இருந்து பார்த்தவர்கள் சொல்லும் சில தனிப்பட்ட வாழ்க்கை நிகழ்வுகள், கொஞ்சம் டாக்டர் சாரதா சொன்னவை நமக்குக் கிடைக்கும். அம்பேத்கர், காந்தி போன்றவர்களை மகாத்மா எனச் சொல்லி பீடமேற்றி நாயக வழிபாட்டை கடுமையாக விமர்சித்து கண்டனம் செய்தவர். அதனால் தான் இந்நூல் கூட ‘அய்க்னொகிளாஸ்ட்’ என்கிற பிம்ப உடைப்பாளர் தலைப்பை பெற்றுள்ளது. ஆனால் அவர் வாழ்நாளிலேயே அவருக்கான பீடமேற்றுதலை, ஜெய்பீம் உள்ளிட்ட சல்யூட்டடேஷன்களை அவர் அனுமதிப்பவராக இருந்தார் என்கிற முரணையும் டெல்தும்டே இந்நூல்வழி உணர்த்துகிறார்.

டெல்தும்டேவின் நூல் நல்ல விவாதவெளிகளை பெறவேண்டிய நூல். இதிலும் இடைவெளிகள், கேள்விக்கான பதில்களை கண்டடைய முடியாத இடங்களை என் வாசிப்பில் நான் உணரவே செய்கிறேன். இன்னும் வெளிவரவேண்டிய ஆதாரங்கள் இருப்பதையே இந்நூல் வழி என்னால் உணரமுடிகிறது.

அம்பேத்கர் பிம்ப உடைவு என்பதை விட, critical appreciation என்கிற தேவையே வரலாற்று மாணவர்களுக்கு அவசியமாகிறது. இன்னும் கேள்விகளும் அது குறித்த வெளிப்படையான தகவல் சேகரிப்புகளும் அம்பேத்கர் என்கிற ஆளுமையை balance ஆக புரிந்துகொள்ள வரலாற்று மாணவர்களுக்கு உதவும். அம்பேத்கர் வாழ்க்கை இன்னும் பல விரிவான ஆய்வுகளுக்கு உகந்த சுரங்கமாகவே இருக்கிறது. டெல்தும்டே போன்றவர் ஆங்காங்கே சில ஒளி பாய்ச்சுவது ஆரோக்கியமான போக்கு எனலாம். இன்னும் வெளிச்சம் படவேண்டிய பகுதிகள் இருப்பதாகவே என் வாசிப்பு எனக்கு உணர்த்துகிறது.

டெல்தும்டே நூல் அளவில் பெரிய நூல். வந்த 2024ல் ரூ 1500 விலையிலான நூல். இப்போது குறைத்து இருக்கலாம் , தெரியவில்லை. படிக்கவும் ஆரோக்கிய விவாதங்களுக்கு இடமளிக்கவும் உகந்த நூல். வாய்ப்புள்ளபோது மேலும் பார்க்கலாம்.

13-1-2025

jan 15

யூசுப் மெஹரலி நாடு மறந்த சோசலிசத் தலைவர்களுள் ஒருவர். 1903ல் பிறந்த மெஹரலி வாழ்ந்த ஆண்டுகள் 47 மட்டுமே. ஏராள அன்பர்களை வாழ்ந்த காலத்தில் பெற்றவர்.

1934ல் காங்கிரஸ் சோசலிச கட்சி அமைந்தவுடன் , பம்பாயின் பல பகுதிகளில் திரளான பொதுக்கூட்டங்களை மெஹரலி ஏற்பாடு செய்தார். தொழிலாளர்களை திரட்டுவதிலும் சோசலிஸ்ட்கள் முனைப்பு காட்டினர். தொழிலாளர்க்கு சோசலிச கல்விக்கு நிரந்தர ஏற்பாடு வேண்டும் என மெஹரலி கருதினார். ஏராள பிரசுரங்கள் வெளிவர உதவினார்

சோசலிஸ்ட் உறுப்பினர்களுக்கும் தொழிலாளர்க்கும் எதை கற்கவேண்டும் என்கிற பாடத்திட்டத்தை ( what to Read Syllabus ) 1937 மார்ச்சில் மெஹரலி உருவாக்கினார்.

1938ல் சோசலிஸ்ட்களுக்கும் கம்யூனிஸ்ட்களுக்கும் மோதல் ஏற்பட்டது. கம்யூனிஸ்ட்கள் குறித்த ஆவணம் ஒன்றை மசானி கொணர்ந்து, அவர்களை வெளியேற்ற வற்புறுத்தினார். பம்பாயில் காங்கிரஸ் சோசலிஸ்ட் இயக்கத்தை காப்பாற்றுகிறவர் மெஹரலி என்கிற பாராட்டை லாகூர் மாநாடு தந்தது.

மெஹரலி வெறும் பொருளாதார கோட்பாடாக சோசலிசத்தை சுருக்கக்கூடாதென்றார். தான் எப்படிப்பட்ட சோசலிஸ்ட் என அவர் விவரிக்கலானார். வெறுப்பின்றி, அழகியல் உணர்வு கொள்ளக்கூடிய, தூய்மை விழையும் சோசலிஸ்ட் என்றார்.

My socialism is based on aesthetic and ethical premises, and not on economics. I hate ugliness and cruelty, that is why I am a socialist.

Those Interested to read this 7 pages essay , kindly click

jan 16

ஷரியாதி எனும் சமூகவியலாளர்

பல மாதங்களாக படிக்காமல் , தள்ளிப்போட்டுக்கொண்டே இருக்கிறாயே, எப்போது எங்களை எடுக்கப்போகிறாய் என நூல்கள் வாசிப்பவர்களை தொந்தரவு செய்திடும். அதை தடுக்க முடியாது. மனிதன் அடுத்த நொடிக்காக இல்லாமல், பல காலம் வாழும் ஆசை கொண்டவன் என்பதால், சேர்த்துக்கொண்டேயிருப்பான். சேர்த்தவை அவனிடம் சிநேகமும் காட்டும், சில நேரம் மூஞ்சியையும் காட்டும்.

அப்படி இரு நூல்கள் தொடர்ந்து மூஞ்சி காட்டிக்கொண்டேயிருந்தன. இரு நூல்கள் மட்டும்தானா- இன்று மூஞ்சி காட்டியவற்றில் இரண்டை மட்டும் சொல்கிறேன். இரண்டு நூல்களும் கம்யூனிசத்தை- மார்க்சியத்தை- இயக்கங்களை விமர்சன கண்ணோட்டத்தில் பார்க்கும் நூல்கள். ஒன்று இஸ்லாமிய சமூகவியல் அறிஞர் எழுதிய நூல், மற்றது இந்திய வலது இந்துத்துவா சார்புடையவர் எழுதிய நூல்.

நூல்களின் பெயர்கள் Marxism and other Western Fallacies An Islamic Critique by Ali Shariati, Denying National Roots Early Communism and India by Dr Rahul Shastri. முதல் இஸ்லாம் பார்வை நூல் 2008ல் வந்ததெனில், இரண்டாவது 2018ல் வந்தது. ஷரியாதியைப் பார்க்கலாம்

முதல் நூலான 'மார்க்சியம் மற்றும் மேற்கு இசங்கள் மீதான இஸ்லாமிய விமர்சனம்' நூலை எழுதியவர் அலி ஷரியாதி. ஈரானில் ஷா ஆட்சி எதிர்த்து கொமெயினி தலைமையில் நடந்த புரட்சியின் கருத்தியல் நாயகர் அலி ஷரியாதி ( Ideologue of Iranian Revolution). ஈரான் மசூதிகளில் அலி அவர்களின் கோட்பாடுகள் முற்றாக பரவி, கொமெயினி புரட்சிக்கு வழி ஏற்படுத்தின. இஸ்லாமின் சமூகவியல் குறித்து ஈரானில் புகழ் வாய்ந்த உரைகளை நல்கியவர் அலி ஷரியதி. அதே சமயத்தில் நிறுவன மத அதிகாரங்கள் குறித்தும் கேள்வி எழுப்பியவர் ஷரியதி. பூசாரித்தனமில்லா இஸ்லாமிய சமூக அறிஞர்.

மார்க்சியம் குறித்து விமர்சகர்கள் பலரும் வைத்த அதே விமர்சனங்களை சற்று மாறுபட்ட மொழியில் ஷரியாதி வைத்துள்ளதாக , இந்நூலை வாசிக்கத் தொடங்கியவுடன் எனக்குப்பட்டது. இவ்வளவிற்கும் ஷா எதிர்த்த ஈரான் மக்கள் எழுச்சி காலத்தில் ஈரானின் இடதுசாரிகள் மக்களுடன் நின்றனர். இஸ்லாமும் மார்க்சியமும் கைகோர்த்தன என மேற்கு பத்திரிகைகள் இதை சுட்டிக்காட்டவும் செய்தன. ஷரியாதி இஸ்லாம் பலமான சக்தியாகவும், மார்க்சியத்தை நம்பிய இடதுகள் பலவீனமான சக்தியாகவும்

இருந்ததாகவே இந்நூலில் சொல்கிறார். அதே நேரத்தில் மார்க்சிய பாடங்கள் உதவியாக இருந்ததை ஏற்கிறார். புரட்சிகர இயக்கங்களின் பாடங்கள் ஈரானுக்கு தேவை எனவும் சொல்லியவர்.

அலி ஷரியாதி முதலில் Man Marxism Islam என்ற உரைதான் நிகழ்த்தினார். டெஹரான் பத்திரிகைகள் அவர் அனுமதி பெறாமலேயே உரைகளை வெளியிட்டன. பின்னர் நூலாக்கம் பெறும்போது மேற்கூறிய தலைப்பைப் பெற்றது.

நவீன மனிதன், அவனுக்கு முன்னரான மனிதனைவிட ஓர் அம்சத்தில் குறையுள்ளவனாக இருக்கிறான் என்கிறார் அலி ஷரியாதி. மனித கட்டுமானம் ( construction of Man) என்பதில் தெளிவற்றவனாக இருக்கிறான். மேற்கு வகைப்பட்டு கட்டுதல் என்கிற மயக்கம் என்கிற விமர்சனத்தை அலி ஷரியதி வைக்கிறார். இவ்வளவிற்கும் மேற்கு கல்வி பெற்ற நவீன சிந்தனையாளர் ஷரியாதி.

மனிதாபிமானம் 4 அம்சங்கள் வழியாக தன் இழுவைகளை முரண்களை சுமந்து செல்வதாகவும் ஷரியாதி சொல்கிறார். மேற்கு லிபரலிசம், மார்க்சியம், இருத்தலியம் ( அவர் உரை நிகழ்த்திய காலத்தில் அதிகம் பேசப்பட்டவராக சார்த்தர் ), மற்றும் சமயம் என இந்நான்கை அவர் வகைப்படுத்துகிறார்.

கிரேக்க வகை தத்துவங்கள், 'மனிதாயம் மற்றும் இறையியல்' முரண்களைப் பேசுகிறது. கடவுள் எதற்கு, மனிதனே எல்லாம் என்கிற பகுத்தறிவு வாதத்திற்கும் செல்கிறது. இதை பொருளாதாரவாதமாக மார்க்சியம் உயர்த்திச் செல்கிறது என ஷரியாதி சொல்கிறார். வால்டேரும் மார்க்சும் மனித சாரத்தின் spiritual dimension என்பதில் கண்ணை மூடிக்கொண்டுவிட்டனர் என்கிற விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. இது மார்க்சியம் மீதான வழக்கமான விமர்சனம்தான். ஓரளவிற்கு ஜார்ஜ் பொலிட்சர் போன்றவர் மார்க்சிய மனித சாரம் குறித்து பேசியுள்ளனர்.

ஷரியாதி மேற்கு தத்துவம் மனிதனை கடவுளாக்கப் பார்க்கிறது. மனிதனோ நுகர்வின் பூசாரியாகிறான் என்கிற கடுமையான விமர்சனத்தை வைத்துள்ளார்.

அறிவியல் உண்மையைத் தேடுவதாகச் சொல்லி, அதிகாரத்தையே ஆராதிக்கிறது என்கிற விமர்சனமுள்ளது. சமயவாதிகள் அறிவியல் குறித்து சொல்வது போலவே, மார்க்சியர்கள் மத நிறுவனங்களின் வர்க்க பாசத்தை பல நூல்களில் பேசியுள்ளனர்.

ஷரியாதி வைக்கும் அடுத்த விமர்சனம் is not Marxism more bourgeoisie than bourgeoise? என்பதாக இருக்கிறது. சோவியத், சீனா அதிகாரிவர்க்க life style அவரை அப்படி பேச வைத்திருக்கலாம்.

இயக்கவியல் பற்றி பேசுகிற இடத்தில் ஷரியாதி ஒரு விமர்சனத்தை வைக்கிறார். Marx transfers humanity from the realm of nature to that of history. மார்க்ஸ் எங்கெல்ஸ் இருவருமே தங்கள் மீதான அதீத குற்றச்சாட்டான நிர்ணயவாதத்திற்கு எதிராக பதிலை தந்துள்ளார்கள். தாங்கள் எதிர்கொண்ட intellectual climate காரணமாக வரலாற்று பொருள்முதவாத அழுத்தங்கள் இருந்திருக்கலாம் என எங்கெல்ஸ் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

சோவியத் சீன அனுபவங்களைப் பார்த்து மற்றொரு விமர்சனத்தை அலி ஷரியாதி வைக்கிறார். சோசலிசத்தை அரசு முதலாளித்துவமாக்கிவிட்டனர். அரசாங்க சர்வாதிகாரத்தை பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் எனச் சொல்லிவிட்டனர். ஒரு கட்சி ஆட்சியை ‘டயாமட்’ என்கிற இயக்கவியல் சாரமாக சொல்லிவிட்டனர் என்கிறார். இது கடுமையான ஒன்று என்றாலும், என் பார்வையில் விவாதிக்கப்படவேண்டிய ஒன்றாகவே உள்ளது.

அலி ஷரியாதி பார்வையில் அவருக்கு மார்க்சியம் குழப்பம் கொண்ட சிந்தனா முறையாக இருக்கிறது.

Regarding man as anything but an element within the confines of the material world- a kind of reductionism . The primacy of man in Marxism derives from the primacy of tools- a kind of utensil ism என்கிற விமர்சனம் அவரிடம் தொழிற்படுகிறது . இதுவும் மேலே சொல்லப்பட்ட விமர்சனம் போன்ற ஒன்றுதான் , வேறு வார்த்தைகளில் வருவதாக எடுத்துக்கொள்ளலாம். மார்க்சியத்தை விதிவாதம் fatalism என சிலர் விமர்சித்தது போலவேத்தான் ஷரியதி விமர்சனமும் செல்கிறது. மேலும் Fanatics என்கிற மாற்று குற்றச் சாட்டை ஷரியாதி வைப்பது ஆச்சர்யமாக இருக்கிறது.

ஷரியாதி சீனாவின் லாவோயிசியம், கன்பூசியசியம், இந்து மதம், புத்தம் ஆகியவற்றின் நிறைகுறைகளை சிறிய அளவில் சொல்கிறார் . புத்தரும் idol worship ஆக வீழ்ந்துவிட்டதைச் சொல்கிறார். கிறிஸ்துவமும் அமைதிக்காக எனப் பிறந்து நிறைய இரத்தம் பார்த்துவிட்டதென்கிறார். இஸ்லாம் வாழ்விக்க வந்த மதம் என உயர்த்தி அலி ஷரியாதி தன் வாதங்களை வைக்கிறார். மதங்களை ஒப்பிட்டு அவர் நல்ல நூல்களை எழுதியுள்ளதாக ஆய்வாளர்கள் சொல்கின்றனர்.

Capitalism’s pseudo man, Marxism’s moulded man- which is more tragic என்கிற ஒப்பீட்டுக் கேள்வியை முன் நகர்த்துகிறார் ஷரியாதி. Work , the highest manifestation of humanity, is placed at the disposal of Capital in capitalism என்கிற மார்க்சியர் ஏற்கும் பார்வையை அலி ஷரியாதி வைக்கிறார். அதேநேரத்தில் Society , human mind , values, morals, cultures, ideas, sensibilities all from the means of production- man the machine என மார்க்சியம் குறுக்கிவிட்டதாகவும் அவர் விமர்சிக்கிறார். Is not Marxism just the other side of the coin of western capitalism என கேள்வி கேட்டு ஒருவகையான குறுக்கிப் பார்க்கும் தீர்ப்பையே அலி ஷரியதியும் எழுதுகிறார்.

ஷரியாதி எழுதுவதை ஒருவர் ஏற்கலாம்- மறுக்கலாம். ஆனால் அவர் ஏராள சிந்தனைக்குரிய கேள்விகளை எழுப்புவதைக் காணலாம்.

Man is god Who creates himself..by his own act?

Materialism is monotheism, how then dualistic shirk, dichotomising man and the world?

Has matter itself produced a being that is immaterial ?

What is choice?

What is good and evil- is that a personal sentiment?

ஷரியாதி , சார்த்தரின் இருத்தல்வாதமும் கடவுளாக பேசப்படும் மனிதனை சாத்தானாக்கி விடுவதாக விமர்சிக்கிறார். மத்திய தர வர்க்கத்தை சேர்த்துக்கொண்டு அவர்களின் நம்பிக்கையில் பாசிசம் ஆட்டம் போட்டதையும் ஷரியாதி இந்நூலில் கொணர்கிறார்.

மார்க்சின் மதம் குறித்த பார்வை பாயர்பாகிடம் பெறப்பட்ட ஒன்று. அதில் மார்க்ஸ் எந்த தத்துவ ஆழத்தையும் ஏற்றாமல் இலக்கிய சுவை நடையை மட்டுமே ஏற்றியுள்ளார் என்கிற மதிப்பிடலுக்கு அலி ஷரியாதி வருகிறார்.

இரு கேள்விகளை மார்க்சிய சிந்தனைக்கு அவர் எழுப்புகிறார். ஒன்று மார்க்சின் limitation பற்றியது. Beyond communism- human destiny leads this world where என்பது பற்றியானது. மார்க்சியர் எல்லோரும் அறிவர் - மனிதகுலத்தின் காலா காலத்திற்குமான சிந்தனையை மார்க்சோ வேறு யாருமோ தந்துவிட முடியாதென்பதை.. . ஷரியாதி போன்ற அறிஞர்களுக்கு இது தெரிந்தும், இப்படியான விமர்சனத்தை அவர் ஏன் வைத்தார் எனத் தெரியவில்லை.

மற்றொரு கேள்வி மார்க்சியர் பார்க்க மறுக்கும் பக்கம் என்பதான கேள்வி. - the historical and social role of religious minded fighters. இப்படியான

சுதந்திர கிறிஸ்துவம் சார்ந்த சிந்தனையாளர்கள், நிறுவனங்களை தாண்டி மக்களுக்காகப் பேசியதை அலி சொல்கிறார். இதில் மார்க்சியர்களுக்கு மறுக்க என்ன இருக்கிறது? ஏன் மதத்தின் பகைவர் மொழியை போல மார்க்ஸ் லெனின் போன்றவர் பேச வேண்டும் என்கிற ஆதங்கம் ஷரியதிடம் இருப்பதை இந்நூல் காட்டுகிறது. ஒவ்வொரு சமயத்திலும் மக்களுக்கான மொழியுடன் கூடிய போராளிகள் இருப்பர் என்பதை ஏற்பதில் சிக்கல் இல்லை.

மக்கள் மீது அபிமானமுள்ள, அவர்களை கைவிடாத சமய போராளிகளிடமும், இதே எதிர்பார்ப்பை மார்க்சியர்களும் வைக்க முடியுமல்லவா? மார்க்சியம் பகை சக்தியா என்பதை அவர்களும் கேட்டுக்கொள்ள வேண்டாமா?

சிந்தனையாளர் அலி ஷரியாதியின் புகழ் வாய்ந்த மேற்கோள்

Don’t believe anything in a national where only the government has the freedom of speech.

ஷரியாதி மனிதன் இஸ்லாம் சமூகம் முதலாளித்துவம் மார்க்சியம் என பெரும் உரையாடல்களை தந்தவர். இன்று அவர் போராடிய ஈரானில் கூட அவர் ஒளிர்கிறாரா எனத் தெரியவில்லை.

16-1-2025

jan 18

Regarding 8th CPC

It is good to hear the acceptance of the GOI to constitute 8 th CPC . Thanks to Delhi election , that made the urgency to bring the govt to terms. We have to wait and watch the constitution of the new CPC and its TOR- Terms of Reference. CG Employees and pensioners would be vigilant to get the same and pursue their expectations with the CPC to take their demands to the logical conclusion. A long way to go. Let us wish them success in every step.

This piece is to write about my impression on seeing a letter written by GS of AIBSNLWA dated on Jan 17th ,2025. The subject matter of that letter is expressing the gratitude with a request of inclusion of BSNL/ MTNL pensioners also in the TOR . The intention is fine, that is to attach the bogey of BSNL and MTNL Pensioners in the rail of CPC and reaching the final destination- implementing the 8 th CPC OM fully for them.

The para, one to the concluding para appeals

“ we earnestly request that the absorbed BSNL/ MTNL be included in the eligibility list of terms of reference for the revision of pension under the 8 th CPC. …”

The 8 th CPC is going to speak about all the CG employees on roll as on 1-1-2026 and all the CG Retirees- retired upto 31-12-2025 getting pension as per 2021 CCS rules ( old 1972 rules).

If the bsnl and mtnl retires are included as per this cut off 31-12-2025 in the 8 th CPC ( before that the question of 7 th CPC or 3 rd PRC haunts) , then what is the demand for those absorbed but retiring from 1-1-2026 onwards. They travel only in PSU 2nd PRC scales ( that is of 6 th CPC environment), as their 3 rd PRC settlement is yet to be done and implemented.

If you want CPC recommendations for all the absorbed with IDA scales or with CDA scales - whatever scales, you need to amend 37 A rules appropriately to take you to the bogey of CG Retirees.

It is better to appeal, also the DOPPw- the pension authorities and DOT to seek the proper modification in the 37 A- bringing a sub rule specially to bsnl mtnl absorbees, for their eligibility to get the recommendations of CPC (possible from 1-10-2000 or at least prospectively) . For this also, DOT has to take its draft to cabinet for approval.

If you want to settle once for all the issue of pension revision as per CPC, then you have to find solution to both pre and post categories on a particular date. As 4 lakhs absorbed , we are all bound by a single compendium of 37 A rules. If we able to bring an amendment in that sub rules , either by amending the sub rule 4 - though cease to be Govt servants but eligible for the recommendations of CPC

Or

bringing a special insertion after sub rule 22 of 37 A, for making the absorbees eligible to get the recommendations of CPC.

But this is a cumbersome task, as it goes retrospectively from 1-1-2000. But if we all particular for the CPC, then it seems to be difficult to avoid this type of bitter pills .

Employees seeking settlement as per PRC, pensioners seeking as per CPC will not meet . If PRC is settled, then DOT takes that only to the absorbed pensioners also. The demand of CPC stands only till the demand of PRC of the employees are settled. After that it looses its logic as per the Nagara judgment. If the demand of CPC is accepted, then employees demand of PRC will loose its logic in the same way. The two cannot go in two different directions.

R. pattabiraman

18-1-2025 0800 hrs

jan 21

The Golden Road - William Darlymple

நூல் அறிமுகம் – எஸ். ஹேமலதா

20 வருடங்களுக்கு முன் இந்த எழுத்தாளரின் The White Mughals புத்தகத்தை வாசித்தேன். வில்லியம் டார்லிம்பிளின் எழுத்து மிகவும் வசீகரமானது. கதா பாத்திரங்களை செதுக்கும் முறையும் அதற்கான அவரின் உழைப்பும் அசாத்தியமானது. அவரின் 'கைருன்னிசாவை' இன்றும் என்னால் மறக்க முடியவில்லை.

சில வருடங்கள் கழித்து அவரின் The Last Mughal வாசித்தேன். இப்போது என்னிடம் வந்திருப்பது The Golden Road. முதலிரண்டு புத்தகங்களில் கிடைத்த வாசிப்பு அனுபவம் டார்லிம்பிளின் 'கோல்டன் ரோட்' வெளிவந்த உடனேயே வாங்கி வாசிக்கத் தூண்டியது. 2024 செப்டம்பரில் ப்ளூம்ஸ்பெரி பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

டார்லிம்பிள் இந்தியா நன்கறிந்த ஸ்காட்லாந்து எழுத்தாளர். வரலாற்று ஆய்வாளர். வரலாறை கதை போலச் சொல்லும் எழுத்து முறை இவருடையது.

செங்கடல் துவங்கி பசிபிக் பெருங்கடல் வரையான தென்கிழக்கு ஆசிய பகுதிகளின் கடல் வாணிபம் பற்றிய நுண்ணிய விபரங்கள் இந்நூலின் பேசு பொருள். 250 BC ல் துவங்கி 1200 AD வரையான காலத்தில் இந்தியாவின் கலை, மதம், நாகரீகம், வானியல், இசை, நடனம், இலக்கியம், கணிதம் ஆகியவற்றின் மீதான அறிவு உலகம் முழுமைக்கும் முன்னோடியாக இருந்தது.

கிரீஸைப் போலவே முற்கால இந்தியாவும் உலகின்- உலகைப் பற்றிய ஆகப் பெரிய கேள்விகளுக்கெல்லாம் உரிய பதிலைத் தந்துள்ளது. இந்திய வானியல் ஆராய்ச்சி , பூமி, சூரியன் , சந்திரனுக்கு இடைப்பட்ட தூரத்திற்கான பிற்கால வானியல் ஆராய்ச்சிகளுக்கு அஸ்திவாரமாக இருந்தது. இன்று உலகின் சற்றேழத்தாழ பாதி மக்கள் வசிக்குமிடங்களில் ஒரு காலத்தில் இந்திய தத்துவங்களும் இந்திய கலச்சாரங்களும் விரவி இருந்தன. இந்திய கோட்பாடுகள் எவ்விதம் உலகை மாற்றின. ரோமபுரி, சீன, அரபு நாடுகள் போன்ற பல பிரதேசங்களில் தங்கள் தத்துவங்களை விரிவு படுத்தி எவ்விதம் தாக்கத்தை ஏற்படுத்தின என்பது பற்றி விரிவாக இப்புத்தகத்தில் ஆசிரியர் பதிவு செய்கிறார்.

10 தலைப்புகளில் இப்புத்தகத்தை ஆசிரியர் வடிவமைத்திருக்கிறார்.

455 பக்கங்களை கொண்ட நூல். அதில் கடைசி 155 பக்கங்களை ஆதாரத் தரவுகளுக்கென ஒதுக்கி தன் உழைப்பையும், நூலுக்கான நியாயத்தையும் தந்திருக்கிறார்.

2

அறிமுக அத்தியாயமே Indosphere -இந்திய துணைக் கண்டத்தில் இருந்து தோன்றி கிழக்கு, தென் கிழக்கு, மத்திய கிழக்கு ஆசிய மற்றும் ஆப்பிரிக்காவின் சில பகுதிகள் வரை பரவிய இந்திய கலாச்சார தத்துவ ஆன்மீக செல்வாக்கை விரிவாகவும் தெளிவாகவும் விளக்குகிறார். The Silk Road-பட்டுப் பாதை என்று அழைக்க கூடிய இந்திய கடல் வழி பொருளாதாரத்திற்கான வழிகள், கடல் வாணிபத்தின் மூலம் இந்தியாவில் நிகழ்ந்த ஏற்றுமதி இறக்குமதி, புத்தமதம் எவ்வாறு வெளி நாடுகளுக்கு சென்றது, இன்றைய ஆப்கானிஸ்தான் பழைய காந்தாரம் அதன் பௌத்த ஸ்தாபனங்கள் என அறிமுகத்திலேயே வாசகரை தன்னுள் ஈர்க்கிறது.

இரண்டாம் அத்தியாயம் புத்த மதத்தின் தோற்றம் அதன் பிரம்மாண்ட வளர்ச்சி பற்றியது. சீனாவில் கன்பூசியஸ், கிரேக்கத்தில் சோபோகிள்ஸ், இந்தியாவில் மகாவீரர் என பெரிய தத்துவ வாதிகளின் காலத்தில் பௌத்தத்தின் தோற்றம், வளர்ச்சி ஏற்பட்டது. அவருடைய கொள்கைகள், சீடர்கள், மடாலயங்கள், அவற்றின் பிரம்மாண்டங்கள், அறிவுத் தேடல்கள், நம்பிக்கைகள், புத்தரின் முற்பிறவிகளைப் பற்றிச் சொல்லும் ஜாதகக் கதைகள் என ஏராளமான தகவல்களைத் தருகிறார் ஆசிரியர்.

பௌத்த தத்துவங்களை தங்கள் அரசுகளில் நடைமுறைப் படுத்தியவர்கள் மௌரிய, குப்த, குஷாணப் பேரரசர்கள். புத்தரைப் பற்றிய தேடல்களுக்காக முதன் முதலில் இந்தியத் துணைக் கண்டத்தில் அகழ்வாராய்ச்சியை மேற்கொண்டவர் மௌரியப் பேரரசர் அசோகர். தன்னை புத்த மதம் சார்ந்தவர் என அறிவித்துக் கொண்டவர். இந்தியாவின் மேற்கில் தோன்றிய ஆயிரம் புத்த விஹாரங்களில் இன்றும் மக்கள் புழக்கத்தில் உள்ள பாஜா விஹாரத்தைப் பற்றிய குறிப்பு பிரமிக்க வைக்கிறது. விஹாரங்களில் உள்ள சிற்பங்கள் , மிகப் பெரிய கருங்கற்களாலான சிலைகள், பிரம்மாண்டமான கட்டிடங்கள் உருவாகும் போதே அவை கல்ப காலம் நிலைத்திருக்கக் கூடியவனவாக கட்டப்பட்டதாக கல்வெட்டுக் குறிப்புகள் கூறுகின்றன. அமைதியான புத்த மதம் எப்படி ஒரு புயல் காற்றாக வணிகர்கள் மூலம் பெருவெளியெங்கும் பரவியது என்பதை

சொல்லும் இந்த அத்தியாயத்திற்கு The Gale of Stillness- அமைதியின் புயல் என தலைப்பிட்டிருக்கிறார் டார்லிம்பிள்.

3

The sink of world's most precious metals. -உலகின் உயர்தரமான விலை மதிப்பற்ற உலோகங்களின் தொட்டி- எகிப்து , ரோம், அரபு நாடுகள், ஐரோப்பா கொரியா என பல நாடுகளில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சிகளில் இந்தியா சம்பந்தப் பட்ட சிலைகள் உலோகங்கள், பண்பாடு எச்சங்கள் கிடைத்திருப்பதை பெயர் , கால விபரம் பற்றிய குறிப்புகளோடு டார்லிம்பிள் தருகிறார். கடல் வாணிபத்தில் முக்கியமான வரி விதிப்பு பற்றிய குறிப்பு இருக்கிறது. கடல் வாணிபத்தின் தங்க சாலை (Golden Road) இந்தியாவுக்கும் ரோமாபுரிக்குமானது தான் ; சீனாவுக்கும் ரோமாபுரிக்குமானது அல்ல என்று சான்றுகளோடு நிறுவுகிறார். கேரளக் கடற்கரையிலிருந்தும் குஜராத்திலிருந்தும் பருவக் காற்றுகளோடு பயணப்பட்ட வணிகக் கப்பல்கள், அவை ஈட்டிய வருமானம் ஏற்றுமதி, இறக்குமதி பொருட்கள் பற்றிய குறிப்புகள் என்விவரங்கள் ஏராளம். சங்கத் தமிழ் பாடல்களில்குறிப்பிடப் படும் யவன வணிகக் குறிப்புகள் பற்றி ஆசிரியர் தரும் விவரங்கள் அவரின் தேடலை, அவற்றின் உண்மைத் தன்மைக்கான அவரின் உழைப்பை காட்டுகிறது.

மகாராஜாக்கள் சக்ரவர்த்திகள்-தெய்வங்கள் குஷாணர்கள் தொடங்கி பௌத்தம் ஆதரித்த அரசர்களைப் பற்றி விலாவாரியாக விவரிக்கிறார். ஆப்கனிலும் ஈரானிலும் அந்நாட்டு நாணயங்களில் இருந்து வந்த இந்துக் கடவுளர்களின் உருவங்கள் பௌத்த ஈடுபாட்டால் மாற்றம் பெற்றன. குஷாணர்கள் காலத்தில் தான் பிரம்மாண்ட உருவங்கள் எழத் தொடங்கியது. அவர்கள் அரியணை வடிவம் பெற்றது. கலாச்சாரப் பரிமாற்றங்கள் நிகழ்ந்த பிறகு தெய்வ வடிவங்கள் அந்தந்த இடங்களின் வடிவங்களையும் ஏற்றுக் கொண்டு மாறிய விதத்தை வர்ணிக்கிறார். பௌத்தத்தின் மகாயான யோகசாரம் நாளந்தா பல்கலைக் கழகத்தில் பாடமாக இருந்திருக்கிறது. பல்வேறு மொழிகளுக்கு மொழிமாற்றம் செய்யப் பட்டு சீன, மங்கோலியா, எகிப்து, ஈரான், பாக்தாத் என எல்லைகள் தாண்டி சென்றிருக்கிறது.

சமஸ்கிருத நூல்கள் பல நாடுகளுக்கும் எடுத்துச் செல்லப்பட்டு சமஸ்கிருத அறிஞர்களால் அந்தந்த நாட்டு மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கிறது. நெசவுத் தொழிலின் மேன்மை, தியானம், யோக, தத்துவங்கள், சீனாவில் ஏற்கப்பட்டு அரசவையின் ஆதரவை பெறுகிறது. பலரும் பௌத்தத்தை கொண்டு

சென்றிருந்தாலும் கடைசியாக குமாரஜீவா என்ற அறிஞரின் உழைப்பால் சீனாவில் அது தழைக்கத் தொடங்கிற்று என்று கூறுகிறார் ஆசிரியர்.

4

Sea of jewels;- நாளந்தாவின் புத்தகக் கிடங்கு தான் இந்த அத்தியாயத்தின் அம்சம். உலக புகழ் பெற்ற பல்கலைக் கழகம் அது. யுவான் சுவாங் கனவு கண்டு, அரசின் எதிப்பை மீறி வந்து பயின்ற இடம். 12ஆண்டுகள் தங்கி இருந்தார். அந்த பிரம்மாண்டமானகட்டிடம், நாள் முழுதும் நடக்கும் விவாதங்கள் என அற்புதமான விவரிப்பில் யுவான் சுவாங்கின் பயணக் குறிப்பான “மேற்கத்திய தாங் அரச பரம்பரையின் பதிவுகள்” ஐ மேற்கோள் காட்டுகிறார் டார்லிம்பிள். நாளந்தாவில் ஆசிரியராக இருந்த 106 வயது ஷிலாபாத்ராவை யுவான் சந்தித்திருக்கிறார். கங்கை கரையில் மகா கும்ப மேளாவை துவக்கி வைத்த இந்து அரசரான ஹர்ஷர், புத்த மடாலயங்களுக்கு புரவலராக இருந்துள்ளார். நாலந்தாவுக்கு 100 கிராமங்களுக்கு மேல் தானமாக அளித்து தினமும் புத்த பிக்குகளுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்திருந்ததாக குறிப்பு இருக்கிறது. யுவான் இந்திய மருத்துவம் பற்றிய சமஸ்கிருதக் குறிப்புகளை சீனாவிற்கு எடுத்துச் சென்றிருக்கிறார்.

ஐந்தாம் நிலை பணிப்பெண்னாக இருந்த ஊ சேஷியன் சீனாவின் சக்ரவர்த்தினியாக தன்னை உயர்த்திக் கொள்கிறார். புத்தத்தின் தாக்கத்தாலும், தன்னை நிலை நிறுத்திக் கொள்ளவும் துணிகரமான முடிவுகளை எடுக்கும் முதல் -ஒரே பேரரசி அவர். இந்தியாவில் இருந்து புத்த பிக்குகளை வரவழைத்து புத்த மதத்தை விவாதித்து கற்கிறார். மொழிபெயர்ப்பை ஊக்குவிக்கிறார். துணிச்சலாக் அரசவை மதமான டாவொயிசத்தை நீக்கி புத்த மதத்தை அரச மதமாக்குகிறார். இந்தியாவில் இருந்து ’சீனி சர்க்கரை’ இந்த பேரரசியின் காலத்தில் தான் சீன உணவிற்கு அறிமுகமாகிறது. இந்தியாவின் மருத்துவம், வாசனை திரவியங்கள், யோகா. நீண்டஆயுளுக்கான மந்திரங்கள், நெறிமுறைகள் என பல ரகசியங்களை புத்த பிக்குகள் மூலம் சீனாவுக்குள் வரச் செய்தார். அந்த பேரரசியின் காலத்தில் பிறகெப்போதும் இல்லாத அளவு இந்திய சீன நல்லுறவு பேணப்பட்டது. இன்றும் மிகப் பெரிய புத்தம் போற்றும் நாடாக சீனா இருப்பதற்கு ராணி ஊ வின் பங்கு அளப்பரியது. இன்றும் சீனாவில் இருந்தும், தைவானில் இருந்தும் யாத்ரீகர்கள் புத்த தலங்களுக்காக இந்தியா வந்த வண்ணம் இருக்கிறார்கள். யுவான் சுவாங்கின் கம்பீரமான

உருவச் சிலை முதுகில் பை நிறைய கையெழுத்துப் பிரதிகளோடு அவர்களை நாளந்தாவிற்கு வரவேற்கிறது.

5

The Diaspora of Gods ;- ஆசிரியர் பௌத்தம் செழித்த பல்லவர் காலத்தைப் பற்றி இந்த அத்தியாயத்தில் விளக்குகிறார். மாமல்லபுர சிற்பங்கள், அரசர்கள் மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன் கால கோவில்கள் போன்றவற்றைக் காண்பதற்காக ஆசிரியர் இங்கு வருகை புரிந்திருக்கிறார். மாமல்லபுரம் ஆதி வராகர் கோவில் திறப்பதற்காக காத்திருந்ததையும் பதிவு செய்யத் தவறவில்லை. அக்காலத்திய பக்தி இலக்கியங்களயும் ஆசிரியர் தொட்டுச் சொல்கிறார். ஆண்டாளின் இரு பாசுரங்களையும் மொழி பெயர்த்து நம்மை வியப்பிலாழ்த்துகிறார். ஆனால் பக்தி ரசத்தை தன்னால் உணர முடியவில்லை என்கிறார். சமஸ்கிருத பண்டிதர்களான தண்டி, காளிதாஸர் அவர்களுடைய படைப்புகள் என தன் தேடல்கள் மூலம் நம் நாட்டின் ஆக உயர்ந்த இலக்கியங்களை நமக்கு நினைவு படுத்துகிறார். தண்டி பார்த்து வியந்த மாமல்லபுர சிற்பங்களை நாமும் பார்க்கிறோம் வியக்கிறோம். வியட்நாமின் மேகாங் டெல்டாவின் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த லிங்கங்கள், விஷ்ணு, துர்க்கை வெண்கல, கற்சிலைகள்போன்றவை அக்கால கேமர் அரசர்களால் கொண்டாட பட்டவை என்கிறார் ஆசிரியர். இந்தியர்களின் தாக்கத்தோடு செய்யப் பட்ட சிற்பங்கள், கிருஷ்ணர் கோவர்த்தன மலையைத் தாங்கும் சிற்பம் அங்கு கண்டறியப் பட்டதன் பின்னணியை சுவையாக விவரிக்கிறார்.

கம்போடியாவின் பனாம் டா மலை கோவர்த்தன மலையாகவும் மேகாங் ஆறு யமுனையாகவும் மாறி இந்திய புனித பூகோள எல்லைகள் தென் கிழக்கு ஆசியாவரை நீண்டதை பதிவு செய்கிறார்.

The Lands of Gold;- ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கடற் சீற்றத்தால் புதைந்து போன இந்திய வணிகக் கப்பல் 1997வாக்கில் சிங்கப்பூர் மீனவர்களால் கண்டெடுக்கப்பட்டு உலகின் பார்வைக்கு வருகிறது. தொடர்ந்த பல அகழ்வாராய்ச்சிகள் நடத்தப் பட்டு ஜாவா சீனா கடல் பகுதிகளில் பல பொருட்கள் கண்டுபிடிக்கப் படுகின்றன. அவை பொ.யு 800களில் (CE 800) ஜாவாவின் பேராபுதூர் சிற்ப அருங்காட்சியகத்தின் பொருட்களுடன் பெருமளவில் பொருந்திப் போவது ஆச்சரியமளிக்கிறது. அதேபோல பல்லவ இளவரசனான வஜ்ரபோதி என்பவருடைய பல நாட்டுப் பயணங்கள், அவரின் தாந்த்ரீக புத்தம், மேற்கொண்ட பிரம்மண்டமான கட்டுமானங்கள் என இந்த

அத்தியாயம் விரிகிறது. இப்போது அதிகம் பேசப்படும் மாண்டேலா என்னும் முறையை கட்டிடக் கலையிலும் அறிமுகப் படுத்தியவர் அவரே என்கிறார் ஆசிரியர்.

6

He who is protected by God;- கம்போடியாவின் கேமர் அரச பரம்பரை, சிவனருளால் கவுண்டின்ய ரிஷிக்கும், காஞ்சீபுர அரச குடும்பத்தைச் சேர்ந்த மீரா என்ற பெண்ணுக்கும் நடந்த திருமணத்தின் மூலம் துவங்குவதாக நம்பப்படும் புராணக் கதையை டார்லிம்பிள் தருகிறார். பொ.யு.400 களில் இந்தியாவில் இருந்து , பிரம்மண அறிஞர்கள் கூட்டம் கூட்டமாக வணிகர்களுடன் மலாயாவுக்கும் காம்போஜம், சீனா, வியட்நாம், கொரியா, ஜப்பான் நாடுகளுக்கும் பயணிக்கிறார்கள். அவர்கள் தங்களுடன் இந்து மத சாஸ்திரங்கள், சிற்ப சாஸ்திரங்கள், நாட்டிய சாஸ்திரங்களை கொண்டு சென்றிருக்கிறார்கள். தென் கிழக்கு ஆசியாவின் அவைகளில் இந்தியப் பழக்கங்களின் தாக்கங்கள் இன்றும் உள்ளன.

இரண்டாம் நூற்றாண்டிலிருந்து இறந்தவர்களை அவர்கள் எரிக்கத் துவங்கினர். உணவு இன்னும் போது இடது கை உபயோகத்தை நிறுத்தியது, வேப்பங் குச்சி கொண்டு பல் துலக்கத் துவங்கியது என பல தனிப்பட்ட பழக்க வழக்கங்கள் இந்தியத் தாக்கத்தால் ஏற்பட்டவையே . ஆனால் இந்தியாவில் இன்றும் பின்பற்றப்படும் மேல் கீழ் சாதிய நடைமுறைகளை தென் கிழக்கு ஆசியர்கள் பின் பற்றவில்லை. மனுநீதியை இந்திய பிராம்மணர்கள் பின்பற்றினாலும் தென்கிழக்கு ஆசியர்கள் அதனுடன் உடன்படவில்லை. பெண்களுக்கு சம உரிமையும் சொத்துரிமையும் வழங்கியிருந்தனர் என்று கூறுகிறார்.

அண்மைக்கால மரபை சோதனையில், பிராம்மணர்கள் பெருமளவில் தென் கிழக்கு ஆசியாவுக்குச் சென்று மணக் கலப்பு நிகழ்ந்திருந்தாலும், 49% பிற தென்னிந்தியர்களும் அங்கு சென்றிருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. இருளர், மலையர், வேளாளர்களின் மரபணுத் தொடர்ச்சி கம்போடியாவில் கண்டறியப் பட்டுள்ளது. வேதியர்கள் அல்லாத பிராம்மணர்கள், பிராம்மணர்கள் அல்லாத தமிழ் மக்கள் தங்கள் குல தெய்வமான அய்யனாரையும் தங்களுடன் கொண்டு சென்றிருக்கிறார்கள். சிறுதெய்வ வழிபாடு பிற்காலத்தில் பெருந் தெய்வங்களாக மாறுபாடடைந்திருப்பதை சொல்கிறார். 5ஆம் நூற்றாண்டு குறிப்புகள் இந்திய பெயர்களையும்,

இந்திய பெயர் கொண்ட இடங்களையும் கேமர் அரசர்கள் ஏற்படுத்தியதை சொல்கிறது என விளக்குகிறார்.

7

The treasure of the books of wisdom;- புத்தக ஞானக் களஞ்சியம் . பொ.யு. 773 வாக்கில் சிந்து ராஜாவின் குழு புதிதாக உருவான பாக்தாதிற்கு சென்றதன் மூலமாக அரபு நாட்டு அரசர்கள் இந்திய கணிதவியல், வானியல், சோதிட அறிமுகத்தை பரிசாகப் பெற்றனர். அந்த கையெழுத்துப் பிரதிகளை ஆக உயர்ந்த ‘ஹிந்த் இந்த்’ என கொண்டாடினர். பிரம்ம குப்தரின் வான சாஸ்திரம் அவர்களுக்கு பெரிய திறப்பைக் கொடுத்தது. பல மொழிகளிலும் மொழிபெயர்ப்பு செய்யப் பட்டது. ஆர்யபட்டா பிரம்ம குப்தா, வராகமிகிரா போன்றோரின் கணித, வானியல், அல்ஜீப்ரா போன்றவற்றை நம்மை விட அராபியர்கள் நன்கு அறிந்திருந்த்தாக சொல்கிறார் ஆசிரியர். உஜ்ஜயினியில் பயன்படுத்தப்பட்ட நீர்க்கடிகாரம் அவர்களை வியப்பிலாழ்த்தியது.

பர்மார்க் அரசர்கள் முதலில் புத்த மதத்தை பின்பற்றினாலும் காலப் போக்கில் இஸ்லாமியர்களாக மாற்றம் பெறுகிறார்கள். பாக்தாதில் ’ஞான இல்லம்’ என்றழைக்கப்படும் மிகப் பெரிய நூலகத்தை அமைக்கிறார்கள். நம் நாளந்தாவுக்கு இணையாக பேசப்பட்டது. பர்மார்க் அரசர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு இஸ்லாமியர்களின் வருகை, சமஸ்கிருத பெர்ஷிய சகவாழ்வு அதன் பலனான அறிவுத் தேடல், கணிதத்தின் அபார வளர்ச்சி, இந்தியர்களின் கண்டுபிடிப்பான லீனியர், குவாட்றாடிக் ஈகுவேஷன்ஸ் , ஜியோமெட் ரிக் முறைகள், சைன், காஸ், கோ டாண்ஜெண்ட் முறைகள் உலகெங்கும் பரவின. இந்தியர்களின் book keeping என்று சொல்லப் படும் கணக்கு வைப்பு முறையும் எண் குறிப்பு உரையும் பல நாடுகளுக்குச் சென்று செழுமைப் படுத்தப் ட்டு இன்றும் பயன்பாட்டில் உள்ளது. அதற்கு காலவாரியான சான்றுகளை பட்டியலிடுகிறார் ஆசிரியர்.

கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவுக்கு வரும் வரை 800 ஆண்டுகள் சமஸ்கிருதமும் பெர்ஷியனும் புழக்கத்தில் இருந்தன. 19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பெர்ஷியன் மெதுவாக வழக்கொழிந்து ஆங்கிலம் அதனிடத்தை ஆக்கிரமித்துக் கொண்டது.

இன்று சுதந்திரம் பெற்று 75 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவின் நேரம் இப்போது திரும்புவதாக பலரும் நம்புகிறார்கள். இந்தியா தன் வெளியுறவுக் கொள்கையின் பலத்தில் கிழக்கு மேற்கு நாகரீகத்தின்

இணைப்பு பலமாக தன் வரலாற்றை, மேன்மையை மீட்டெடுக்கும் தருணம் இது என நினைக்கிறார்கள். இந்தியப் பொருளாதாரம் ஒரு தலை முறையில் நான்கு மடங்கு உயர்ந்துள்ளது. கணிதத்திலும், அறிவியலிலும் இந்தியாவின் புகழ் நிலை பெற்றிருக்கிறது. சிலிகான் பள்ளத் தாக்கில் இந்திய மென்பொருள் அறிஞர்கள் தங்கள் அறிவின் மூலம் ஒரு 'ஞான இல்லத்தை' அங்கேஉருவாக்கி இருக்கிறார்கள்.

தற்போதுள்ள முதன்மையான கேள்வியே இந்த நூற்றாண்டின் இறுதியில் முந்தப் போவது அமெரிக்காவா, சீனாவா, இந்தியாவா என்பதே. எந்த வகையான இந்தியா அப்போது இருக்கும்? இப்புத்தகத்தை எழுதும் போது இந்தியா மக்கள் தொகை பெருமளவில் உயர்ந்துள்ளது. உலகின் ஆகப் பெரிய பொருளாதார சக்தியாக மாறப் போகும் பாதையில் பயணித்துக் கொண்டிருக்கிறது. பிரிட்டனை அது பின் தள்ளி விட்டது. அடுத்த பத்தாண்டுகளில் ஜெர்மனி, ஜப்பானை முந்திவிடலாம்.

இந்தியா தன் பன்முகத் தன்மை, வெளிப்படைத் தன்மை, இணைந்த வாழ்க்கைக்கான ஏற்பு, பல் நாகரீக ஏற்பு போன்றவைகளால் எப்போதும் உலகில் தன் தாக்கத்தை ஏற்படுத்தி முன்னோடியாக இருந்ததை வரலாறு சொல்லும். புதியபுதிய யோசனைகளையும் புதிய அறிமுகத் தாக்கங்களையும் உள்ளிழுத்து முற்போக்கான வியத்தகு முறையில் தன்னை உலகின் முன் செதுக்கிக் கொண்டு புத்துணர்வுடன் வருவதே இந்தியாவின் பலம். ஆயிரம் ஆண்டுகள் இந்தியாவின் சிந்தனைகள் தங்க சாலை (Golden Road) வழியாக பரவி உலகையே மாற்றியது.

கிரேக்க நாகரீகத்திற்கு இணையாக சொல்லக் கூடிய இந்திய செல்வாக்கு மண்டலம் அரசியல் கலாச்சார எல்லைகள் தாண்டி வன்முறையற்ற வழியில் உலகில் பரவியது. இம்முறையில் இந்தியக் கலாச்சாரங்கள் எங்கெல்லாம் சென்றதோ அவ்விடங்கள் எல்லாம் செழித்தன. 1947ல் பிரிட்டனிடம் இருந்து சுதந்திரம் பெறும் போது நினைக்காத அவ்விடத்தை இந்தியா மறுபடி பெறுமா என்பதே இப்போதுள்ள கேள்வி என்று ஆசிரியர் வில்லியம் டார்லிம்பிள் இப் புத்தகத்தை நிறைவு செய்திருக்கிறார்.

நம் வரலாற்றை பெருமையை மீண்டும் நமக்கு நினைவு படுத்தும் இப் புத்தகத்தை வாசிப்பது நமக்கு ஒரு சிலிர்ப்பை எழுச்சியை தரும் என்பதில் சந்தேகமில்லை. வில்லியம் டார்லிம்பிள் வாசகர்களின் கண்களுக்கு விருந்தளிக்கும் 'இமேஜ்- போட்டோக்கள்' பலவற்றை இணைத்து நம்மை வியக்க வைத்துள்ளார்.

jan 22

தேசிய வாக்களர் தினம் - ஜனவரி 25

இவ்வாண்டு ஜன 25 அன்று நாடு தனது 14வது தேசிய வாக்காள தினத்தைக் கொண்டாட இருக்கிறது. வாக்காளர்கள் மற்றும் புதிதாக சேர இருக்கும் இளம் வாக்காளர்களுக்கும் , தேர்தல் வேலைகளில் நியாய உணர்வுடன் ஈடுபடும் அரசியல் தொண்டர்கள், அலுவலர் அனைவருக்கும் நல்வாழ்த்துகள்.

தமிழகத்தில் கடந்த ஜனவரி 11 , கோவையில் துவங்கி வேதாரண்யம் வரை, 400 கி மீ 'நேர்மையான தேர்தல்' என்கிற விழிப்புணர்வு நடை பயணத்தை மேற்கொண்டுள்ள இளம் குழுவினருக்கு நல்வாழ்த்துகள். காந்திய தருணங்களை இந்த இளம் தோழர்கள் ஆங்காங்கே உணர்ந்த வண்ணம் சாகச சாதனை நெறிப் பயணத்தை- வாக்கின் வலிமை , நேர்மையை சொல்லி செல்கின்றனர். அவர்கள் உடல், மன ஆரோக்கியத்திற்கும், சிந்தனை செயல் நேர்மைக்கும் நல்வாழ்த்துகள்.

இப்படியான ஓர் இளைஞரின் கேள்வி ஒன்றுதான், செப்டம்பர் 2010ல், தேசிய இளைஞர் தினம் என்கிற ஒன்றை அரசாங்கம் அனுசரிக்க வழியானது. அந்த இளைஞர் அப்போதிருந்த தேர்தல் ஆணையர் குரேஷி அவர்களிடம் கேள்வி ஒன்றை எழுப்பினார். இந்திய வாலிபன், யுவதிக்கு 18 வயது மிக முக்கியமான ஒன்றல்லவா- அவன் புதிய மகத்தான உரிமை ஒன்றை நம் நாட்டில் பெறவில்லையா, அது ஏன் கொண்டாடப்படுவதில்லை. இந்தக் கேள்வி , உரிய வடிவங்களை தேர்தல் கமிஷனர் அலுவலத்தில் பெற்று, கேபினட் சென்று , தேசிய வாக்காளர் தினம் உருவாகிட வழிவகுத்தது. 2011 ஜனவரி முதல் குடியரசுத் தலைவர் பங்கேற்று நிகழ்வுகளும் நடந்து வருகின்றன.

வாக்காளர் உறுதிமொழி என கீழ்கண்ட வரிகள் சொல்லப்படுகிறது.

Voters' Pledge

We , the citizens of India, having abiding faith in democracy, hereby pledge to uphold the democratic traditions of our country and the dignity of free, fair and peaceful elections, and to vote in every election fearlessly and without being influenced by considerations of religion, race, caste, community, language or any inducement.

இன்று உலகின் பெரும் ஜனநாயக நாடு இந்தியா என அறியப்பட்டுள்ளது. இந்திய அரசியல் அமைப்பு அவை , வயது வந்த அனைவருக்கும் வாக்குரிமை என்கிற மகத்தான, உலகில் நடந்த பல புரட்சிகளுக்கு இணையான முடிவை எடுத்தது.

சைமன் கமிஷன் வந்த நேரத்தில், பிரிட்டன் நாடாளுமன்றத்தில் கேலி பேசியவர்க்கு பதிலைத்தர நேரு கமிட்டி 1928ல் அமைந்து, 1931 கராச்சி தீர்மானம் என வயது வந்த ( 21) அனைவருக்கும் வாக்குரிமை என்கிற கொள்கை பிரகடனத்தை, தீர்மானத்தை காங்கிரஸ் ஏற்படுத்திக்கொண்டது.

நாட்டில் நிலவிய 'கம்யூனல் வாக்காளர்' , பாகிஸ்தான் பிரிவினை அனுபவம் கணக்கில் கொள்ளப்பட்டது. 1935 இந்திய சட்டம் இப்படித்தான் பேசியிருந்தது. Communal voters என்றது.

No personal shall be included in the electoral roll for a Sikh Constituency, a Mohammadan Constituency, Anglo Indian constituency, European or Christian constituency etc unless he is a Sikh, Mohammadan, Anglo Indian, European or Christian etc.

இந்த சிந்தனை அடியுடன் மாற்றம் பெற்றது. விடுதலை இந்தியாவில் 'ஒரே வாக்களர் பட்டியல்' - நீங்கள் ஏழையோ- பணக்காரரோ, பஞ்சையோ- சொத்துதாரிகளோ, ஆணோ- பெண்ணோ- மூன்றாம் பாலினமோ, எம்மதமோ- எச்சாதியோ- எம்மொழியோ எதையும் பாராது ,21 வயது வந்த ( தற்போது 18) குடிமகன் அனைவருக்கும் வாக்குரிமை- ஒரே ரிஜிஸ்டர் என்கிற மகத்தான ஜனநாயகப் புரட்சியை இந்தியா, தனது முதல் பொதுத்தேர்தலிலேயே 1951-52ல் நிகழ்த்திக் காட்டியது. உலகம் இந்த அதிசயத்தை வியந்து பார்த்தது.

இந்த 'ஒற்றை வாக்களர் பட்டியல் ரிஜிஸ்டர்' தயாரிப்பு என்கிற பெரும்வேலையை, இன்று புகழேணியின் எந்த படிக்கட்டிலும் வைக்கப்படாத அரசியல் அமைப்பு செயலக உயர் அலுவலர்கள்- பி என் ராவ், அய்யங்கார், முகர்ஜி, பத்மநாபன், சுப்பிரமணியன், பிரிஜ் பூஷன் போன்றோர் , வெளித்தெரியாமல் ஏராள அலுவலர்களின் பெரும் உழைப்புடன் செய்து முடித்தனர். இவர்களின் வேலைகளை அங்குலம் அங்குலமாக பேரா ஆர்னித் ஷானி தனது நூலான How India Became Democratic என்பதில் சொல்லியிருப்பார்.

இவையெல்லாவற்றிற்குமான காந்திய தருணங்களும் உண்டு. 1920-21ல் காந்தியடிகள் , மக்கள் திரள் காங்கிரசை உருவாக்கும் வகையில் Congress constitution- அமைப்பு விதிகளை உருவாக்கி தொடர்ந்து அவை குறித்து விளக்கியும் விவாதித்தும் வந்தார். அப்போது அவர் பேசிய ஒன்று, இந்தியா உலகம் வியக்கும் ஒற்றை வாக்களர் பட்டியலை உருவாக்கவேண்டும் என்றது.

காந்தியின் இந்த வரிகள் மார்ச் 30, 1921ல் பேசப்பட்டவை

..Establishing an adult suffrage open to men and women..we must aim enlisting every adult member of every family on our register. We should have all the Mussalmans, all the castes, all the artisans, all the paraiahs, whom we can induce to come our register, it will be then become a most democratic register of voters that the world can show.

எப்படியான பார்வை தீர்க்கத்தை , நூறு ஆண்டுகளுக்கு முன்னர் a most democratic register of voters என்கிற சிந்தனையை , அவர் தெளித்து சென்றுள்ளார். அதை constitutional Assembly secretariat அமுலாக்கம் செய்துள்ளது என நினைத்துப் பார்க்க முடிகிறது.

காந்தி இன்று நாம் சொல்லும் ‘ நோடா’ என்கிற கருத்தாக்கத்தை 1920 லேயே பேசியுள்ளார். 1990 களில் அமுலான ‘வோட்டர் அய்டி’ என்பதை 1930 களிலேயே பேசியுள்ளார் என நாம் பார்க்க முடியும். காந்தி வாக்காளர்களுக்கு ஒரு மிக முக்கிய அறிவுரையை- அறவுரையை வற்புறுத்தினார்.

நீ தேர்ந்த்கெடுக்கப்போகும் பிரதிநிதி உனக்காகத்தான் அங்கே அனுப்பி வைக்கப்படுகிறார். அவர் உன்னை வழிநடத்துவதாக கருதாதே. நீ தான் அவரை guide செய்யவேண்டும். அது உன் பொறுப்பு. அவர் பேசும் இசமோ கொள்கையோ கட்சிக் கலரோ முக்கியமில்லை. அவர் கேரக்டர்- நடத்தையைப் பார்த்து, அவர் செயலைப் பார்த்து தேர்ந்தெடு. உன்னால் அவர் குறித்த மதிப்பீட்டை உருவாக்க்கிக்கொள்ள முடியவில்லை என்றால், நிற்பவர் எவர் குறித்தும் உருவாக்கிக்கொள்ள முடியவில்லை எனில் வாக்கை எவருக்கு இல்லை எனச் சொல் என்றார் காந்தி. அன்றே நோடா பேசியவராக இருப்பதை காண்கிறோம்.

இன்றைய இந்திய தேர்தல் பல அழுக்குகளை அப்பிக்கொண்டு நிற்கிறது. எல்லா புரட்சிகளுக்கும் நேர்ந்த ஒன்றே , வயது வந்த வாக்களர் ஓட்டுரிமை என்கிற ஜனநாயக புரட்சிக்கும் நேர்ந்துள்ளது. பண விளையாட்டும் சாதி மத சாகசங்களும் இந்திய தேர்தலை ஆட்டிப்படைக்கின்றன. Criminalisation என்பதை எவராலும் தடுக்க முடியவில்லை.

தேர்தல் கமிஷன் அதிகாரமற்று நிற்கிறது. அதனால் ‘மாரல் கோடுகளை’ அமுலாக்க முடிவதில்லை. பிரதமர் , முதல்வர், கட்சியின் தலைவர்கள் என மாதிரியாக நடந்துகொள்ள வேண்டியவர்களே , நாட்டு நலனைவிட, கட்சியின் வெற்றி நலன்- அதற்கு என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கிற நிலைப்பாட்டை எடுத்து வருகின்றனர். வாக்காளர்களின் ஏழ்மை நிலையை முற்றிலுமாக சாதகமாக்கிக்கொண்டு தேர்தல்விளையாட்டு -with all foul game-

நடைபெற்று வருகிறது. பணக்காரர்களும் இந்த விளையாட்டில் தங்களுக்கானவற்றை செய்யாமல் இல்லை.

கட்சிகளை பதிவு செய்யும் அதிகாரம் கொண்ட தேர்தல் கமிஷனுக்கு, உரிய விதிகளின்படி அதை deregister செய்யும் அதிகாரம் உண்டா என்ற கேள்வியை தேர்தல் கமிஷன் கேட்கிறது. ஆனால் அவ்வதிகாரம் அரசியல் பழிவாங்கலானால் என்னவாகும் என்கிற எதிர் கேள்வியும் இருக்கிறது. சுயேட்சையாக உரிய அதிகார நியாய உணர்வு கொண்ட தேர்தல் கமிஷன் உருவாகுமா என்கிற கேள்வியே தேசிய வாக்காள தினத்தன்று கேட்கப்பட வேண்டியுள்ளது. கண்ணியமிகு வாக்காளர், நேர்மையான வேட்பாளர், நியாயமான தேர்தல் என்பதெல்லாம் இனி வெறும் கனவா?

22-1-2025

jan 24

தமிழக நினைவில் நிறுத்தப்படாத பெயர்களில் ஒன்று ஆக்கூர் அனந்தாச்சாரி. 'வாலாஜா நால்வர்' என தன் சக தோழர்களான ஜமதக்னி, கல்யாணராமய்யர், சுந்தரவரதனுடன் இணைந்து தேசபக்த போரில் முன் நின்றவர்.

இவர்கள் நால்வருமே செங்காடு கிராமத்தை தளமாக வைத்து பிரிட்டிஷ் எதிர்ப்பு விடுதலைப் போரில் நிறை தியாக வாழ்வை தந்தவர்கள். குதிரை குளம்பு மிதியுண்டு, குண்டாந்தடி மண்டையை தோளை பிளக்க அடிவாங்கியும் விடுதலைக்காக மூச்சு விட்டுக்கொண்டிருந்தவர்கள். பாரதியின் பாடல்களை தெருவெங்கும் பாடிக்கொண்டே சத்தியாகிரக வேள்விகளில் நின்றவர்கள்.

சிறையில் அவ்வப்போது ஆண்டுக் கணக்கில் அடைபட்டுக் கிடந்தனர். செக்கிழுத்தார் ஆக்கூர். கல் உடைத்தனர். கம்பளி தொழிலை செய்ய வைக்கப்பட்டனர். ஜதிந்திரதாஸ் மகத்தான தியாகத்தின் பலனாக உருவான சிறைவிதிகளுக்காக தம் அளவில் போராடி உள்ளே அடித்து நொறுக்கப்பட்டவர்கள்.

காந்தி மீது அளவற்ற நம்பிக்கை வைத்தவர்கள். ராஜாஜியுடன் ஆக்கூர் முழுமையாக நின்றார். தீனபந்து ஆசிரமத்தில் மிக மிக எளிய வாழ்வை மேற்கொண்டவர்கள். மக்களுக்கான தேசிய பள்ளிகள் சோதனை செய்தவர்கள். இந்தி பிரச்சார சபா நடத்தியவர்கள். காந்தி அறிவித்த அனைத்து போராட்டங்களிலும் முன் நின்று சிறையேகிய வாலாஜா தோழர்கள் 'குவிட் இந்தியா' இயக்கத்தில் பங்கேற்கவில்லை. ராஜாஜியின் செல்வாக்கு அந்த அளவு ஆக்கூராரிடம் இருந்தது. சத்தியமூர்த்தியிடமும் காமராஜிடமும் கூட பழக்கம் உண்டு. ஆனால் ராஜாஜி பக்கம் நின்றவர் அனந்தாச்சாரி. அண்ணல் தங்கோவுடனும் இணைந்து போராடியவர்.

புகழ் வாய்ந்த பாடகர் கிட்டப்பாவின் உயிர் நண்பர் ஆக்கூரார். கிட்டப்பா வீட்டில் அவ்வப்போது நிம்மதி கிடைக்கும். ஆனாலும் போலீசார் வந்தால், கிட்டப்பாவின் புகழுக்கு செல்வ பெருக்கத்திற்கும் தன்னால் இடர் நேர்ந்துவிடக்கூடாதென்று போலீசார் அழைக்க வெளியேறியவர் ஆக்கூர். கிட்டப்பா மறைந்து அக்குடும்பத்தின் சகோதரி, சகோதரர் ஏழ்மை நிலைக்கு சென்றதையும் பார்த்தவர் ஆக்கூரார்.

கிட்டப்பா பெயரில் செங்கோட்டை பகுதியில் இந்தி பள்ளி தொடங்கி கற்பித்து வந்தார் அனந்தாச்சாரி. அனந்தாச்சாரி போராட்டங்களில்

மட்டுமல்ல, எழுத்துலகிலும் பிரகாசித்தவர். ஜமதக்னி பற்றி கேட்கவே வேண்டாம். தமிழ் சரியாக தெரியாது என வந்த ஜமதக்னி தமிழ் நூல்களில் எப்படி தேர்ச்சி கொண்டார் என ஆக்கூர் சொல்லியிருக்கிறார். கிட்டப்பா பெயரில் பிரசுராலயம் கண்டு நூல்களைக் கொணர்ந்தவர் ஆக்கூர்.

ஆக்கூரார் பாரதி குறித்து எழுதியதை கிருங்கை சேதுபதி கொணர்ந்துள்ளார். கிருங்கைக்கு வணக்கம். ஆக்கூர் என்றுதான் ராஜாஜி அவரை அழைப்பார். நன்றாக வேலை வாங்குவார், திட்டுவார். ஆக்கூர் கோபம் கொண்டு பதில் பேசினால் ராஜாஜியும் பொறுத்துக்கொண்டு சமாதானம் செய்வார். ஆக்கூர் நேரு குறித்தும் நூல் எழுதியுள்ளார். இன்னும் தமிழ் பொது புத்தி, இங்கு துயர் தாங்கிய ஏராள விடுதலைப் போராளிகள் குறித்த ஆய்வுலகை அமைக்கும் நிலையை உருவாக்கிக்கொள்ளவில்லை.

ஜமதக்னி தன் மார்க்சிய பயிற்சியால், கம்யூனிஸ்ட் கட்சி தொடர்பால் தனது தனிப் புகழை எட்டினார். அவர் கடலூர் அஞ்சலை அம்மாள் மகள் திலகவதியை மணந்தவர். அஞ்சலை அம்மாள் ஆக்கூர், ஜமதக்னிக்கு அவ்வப்போது சோறு தந்து, சிறைக்கும் சென்று உதவினார். ஜமதக்னி மார்க்சின் மூலதனத்தை தமிழில் மொழி பெயர்த்த மூத்தவர்.

1990 களில் எவ்வாண்டு என நினைவில்லை, ஜமதக்னி மூலதன மொழிபெயர்ப்பை திருவாரூர் நூலகத்தில் படித்து குறிப்பெடுத்த நினைவு இருக்கிறது. ஜமதக்னி குறித்து அவரது மாப்பிள்ளை ஆய்வாளர் நாகசாமி நூல் எழுதியுள்ளார் என அறிகிறேன். நான் படிக்கவில்லை.

ஜமதக்னி , சிங்காரவேலர் , ஆக்கூர் அனந்தாச்சாரி , ராஜன் என பெரும்படை சிறையில் , சில நாட்கள் ஒருங்கே இருந்த போது ராஜன் ஜமதக்னியிடம் பயமுறுத்திய அறிவுரையை வேடிக்கையாக ஆக்கூர் பதிவு செய்துள்ளார். சென்னை சிறையில் இது நடந்ததாக ஆக்கூர் பதிவு செய்துள்ளார்.

ஆக்கூர் வரிகளை அப்படியே தருகிறேன்

" அரசியல் கைதிகள் கூட்டமாக வேலூர் சிறைக்கு மாற்றப்பட்டனர். நாங்கள் நால்வர் டாக்டர் ராஜன், சிங்காரவேலு செட்டியார், ஜமதக்னி, நான் மட்டும் சென்னை சிறையிலேயே வைக்கப்பட்டோம். ஆங்கிலோ இந்தியர் பிளாக்கில் எங்களை வைத்தனர்.

சிங்காரவேலர் பழுத்த கம்யூனிஸ்ட். கான்பூர் சதி வழக்கில் தண்டனை அடைந்தவர். அவர் ஹெர்னியா நோயால் பீடிக்கப் பெற்றிருந்தார். கூடவே மூல வியாதியும் ஏற்பட்டிருந்தது.”

ஜமதக்னி அடிக்கடி சிங்காரவேலருடம் இருந்ததைப் பார்த்தார் டாக்டர் ராஜன். இதைக்கண்ட ராஜன் சொல்லியதை ஆக்கூர் எழுதுகிறார்

“ அந்தக் கிழவனை அணுகாதே ஜமதக்னி, நஞ்சு போதிப்பான் என எச்சரித்தார் ராஜன். எனினும் ராஜன் பேச்சைக் கேட்காமல் , ஜமதக்னி எப்போதும் சிங்காரவேலு செட்டியார் அறையிலேயே கிடப்பார். அவருக்கு செட்டியார் மாமிச உணவோடு கம்யூனிச உணவும் ஊட்டி வந்தார் போலும்”

ஜமதக்னிக்கு சிங்காரவேலர் செய்த உபதேசம் என ஆக்கூர் சொல்லியிருப்பது

“ டே ஜமதக்னி, காந்தி முறையால் ஒரு நாளும் சுதந்திரம் வராது. புரட்சியால்தான் வரும். அதோ பார் ரஷ்யாவை. பலாத்கார புரட்சியால் கம்யூனிசம் உண்டாக்கி விட்டார்கள் , என்று ஜமதக்னிக்கு அவர் உபதேசம் செய்தபடி இருந்தார். “

அப்போது காந்தியடிகள் முறையால் போராட்டங்களால் சுதந்திரம் வரும் என ஜமதக்னி பதில் சொல்லியிருந்தாலும் சிங்காரவேலர் போதனைகள் படிந்து சோசலிசம் மீது நம்பிக்கை கொண்டார் ஜமதக்னி, அது குறித்து நூல்கள் எழுதலானார் என ஆக்கூர் சொல்லியிருப்பார்.

ராஜனுக்கும் ஜமதக்னிக்கும் இதில் விவாதம் நடந்ததையும் ஆக்கூர் சொல்கிறார். ராஜன் “ ஜமதக்னி தப்பு வழி போகாதே, காந்தியடிகள் போராட்டத்தால் முதலில் சுதந்திரம் வரும் வழியைப் பார்ப்போம். பிறகுதான் சோசலிசமா கம்யூனிசமா என்று கவனிக்க வேண்டும். சுவர் இருந்தால்தானே சித்திரம் எழுத முடியும். முதலில் சுதந்திர சுவர் முதலில் கிடைக்க வேண்டும் என்றார்.

ஜமதக்னி ராஜனை மறுக்கவில்லை, நல்ல யோசனைதான் என்பதுடன் நிறுத்திக்கொண்டதை ஆக்கூர் சொல்கிறார்.

ஆக்கூர் எழுதுகிறார் “ காந்தியடிகள் முயற்சியால் சுதந்திரம் வந்ததை சிங்காரவேலு செட்டியார் காணக்கொடுத்து வைக்கவில்லை”

அதேபோல் ‘கம்யூனல் அவார்ட்’ , காந்தி உண்ணா நோன்பு - புனே உடன்பாடு வந்தபோது, காந்தியடிகள் உயிரை அம்பேத்கர்தான்

காப்பாற்றினார் என்ற் பேச்சு வந்ததை சுட்டிக் காட்டி ஆக்கூர் தன் வருத்தத்தை பதிவு செய்துள்ளார். வட இந்தியாவில் இப்படி முழக்கம் என அவர் பதிவு செல்கிறது.

“ காந்திக்கு உயிர்ப் பிச்சை கொடுத்த அம்பேத்கர் வாழ்க, அன்னார் வாழ்க” . இந்த முழக்கம் உண்மை அறிந்த தேசிய ஊழியர்களிடம் வருத்தத்தை ஏற்படுத்தியது. ஆக்கூர் சொல்லியிருப்பது ‘ அனாவசியமாக அம்பேத்கருக்கு அவ்விஷயத்தில் மதிப்பு தரப்பட்டது’ .

பெரியார் குறித்து ஓர் இடத்தில் நேர்மறையாகவே சொல்லி சென்றுள்ளார் ஆக்கூர். துணையாக நின்றார் என்பது செய்தி. திமுக தனித் திராவிடநாடு கோரிக்கையை கைவிட்டதில் ராஜாஜியின் செல்வாக்கு உண்டு என்கிற எண்ணத்தை சொல்கிறார் ஆக்கூர்.

ஆக்கூர் அவர்கள் எழுதிய தொடர்கள் 1968ல் அரசியல் நினைவலைகள் என நூலானது. மேற்கூறிய செய்திகள் அதில் இடம்பெற்றவைதான். ஆக்கூர் அனந்தாச்சாரி போன்றவர்களின் போராட்ட வாழ்வும், எழுத்துக்களும் விடுதலைக் கால தமிழகத்தின் முக்கிய ஆவணங்கள். காலம் அவர்களை வருடிக்கொள்ளுமா?

24-1-2025

jan 25

தாகூர் 1916-17 களில் ஜப்பான் அமெரிக்க சுற்றுப்பயணத்தில் தேசியம் - Nationalism குறித்து ஆற்றிய உரைகளை , புக் கிளப் கலிபோர்னியா சார்பில் , அமெரிக்காவில் ஆகஸ்ட் 1917ல் வெளியிட்டனர்.

மேற்கில் தேசியம் எப்படி புரிந்து கொள்ளப்பட்டுள்ளது, ஜப்பானின் தேசியம் எவ்வாறு தொழிற்படுகிறது, இந்தியாவில் தேசியத்தை எப்படி புரிந்து உள்வாங்கிக் கொண்டால் , இந்தியாவும் உலகமும் நன்மை பெறும் என இந்த உரைகளும் தாகூரின் எழுத்துக்களும் பேசுகின்றன.

தேசியம் குறித்து பேசப்பட்ட மிக முக்கிய கருத்தாங்களில் ஒன்றாக தாகூரின் தேசியம் குறித்த அவரின் பார்வை கவனிக்கப்படுகிறது. மார்க்சிய வரலாற்றாய்வாளர் இர்பான் தனது தொகுப்பு நூல் ஒன்றிலும், தாகூரின் தேசியம் குறிப்பை சேர்த்தே கொணர்ந்துள்ளதைக் காண்கிறோம்.

இந்நூல் இணையத்தில் கிடைக்கிறது. நூல் முழுவதையும் வாசிக்க முடியாதவர், குறைந்தது Nationalism In India என்கிற மிக அற்புதமான தெறிப்பை படித்துப் பார்க்கலாம். இணையவழியில் படிக்க முடியாதவர், தாகூரின் இந்நூலை அமேசான் மூலம் பெறமுடியும். கனடா டாலர் 7 என ஸ்டிக்கர் போட்டு வருகிறது. 2023ல் FP classics என்கிற பதிப்பகத்தார் இந்நூலை மீளக் கொணர்ந்துள்ளனர்.

தேசிய பெருமிதங்களில் மானுட மதிப்புகளை அழித்துக்கொள்ளப் போகிறோமா, அதிகார வெறியில் நமது நன்னெறிகளை தூக்கி வீசப் போகிறோமா என்கிற கேள்வியையே அமெரிக்கா போன்ற மேற்கு தேசங்கள் முன்னர் தாகூர் எழுப்பினார்.

இந்தியாவில் அரசியல் சுதந்திரம் என்கிற பெரும் அதிகாரத்திற்காக, இங்கு நிலவும் சமூக பிரச்சனைகளை மூடிவைக்கப்போகிறாயா என்ற கேள்வியை அவர் 118 ஆண்டுகளுக்கு முன்னர் எழுப்பினார். எப்படியான தேசத்தை, அரசியல் அதிகாரம் என்பதை மட்டுமே துரத்தப்போகும் தேசத்தையா, அல்லது மானுட விழுமியங்களை நன்னெறிகளை விடாமல் , சமூக பதட்டங்களை தணித்துக்கொண்ட, நிர்மாண பணிகளில் அறத்துடன் செயல்படக்கூடிய தேசத்தை கட்டப் போகிறோமா என்ற பெரும் கேள்வியை சுயவிமர்சனமாக அமெரிக்காவிலிருந்து அப்போது அவர் எதிரொலித்தார். தேசம் என்றால் என்ன என்ற கேள்வியை எழுப்பிக்கொண்டு அவர் விடை தேடலானார்.

தாகூரின் ‘இந்தியாவில் தேசியம்’ மிகக் குறைந்த பக்கங்களைக் கொண்ட, ஆனால் ஆழமும் அடர்த்தியும் கொண்ட எழுத்து. அதிலிருந்து எனக்குப் பிடித்த சில தெறிப்புகள்

-India is no beggar of the west

-We cannot borrow other people’s history. If you borrow things that you do not belong to your life, they only serve to crush your life

**-** The mistake that we make is in thinking that man’s channel of greatness is only one

**-** We must know that future is waiting for those who are rich in moral ideals and not in mere things. Men of thought and power will discover the spiritual unity, will realise it.

**-** It is my conviction that my countrymen will truly gain their India by fighting against the education which teaches them that a country is greater than the ideals of humanity

**-** There is only one history- the history of man. All national histories are merely chapters in the larger one

**-** Each individual has self love. Brute instinct leads him to fight with others in the sole pursuit of his self interest. But man has also higher instincts of sympathy and mutual help- a great moral one.

**-** Nationalism is a menace

**-** human beings differences are not like the physical barriers of mountains, fixed for ever- they are fluid with life’s flow, they are changing their courses and their shapes and volume

**-** In her caste regulations India recognised differences, but not the mutability which is the law of life. In trying to avoid collisions she set up boundaries of immovable walls, thus giving to her numerous races the negative benefit of peace and order but not the positive opportunity of expansion and movement

சில வரிகளை மட்டுமே நான் இங்கு தொட்டுக்காட்டியுள்ளேன். தாகூரின் சிந்தனையை முழுதாக உள்வாங்க, நூலினை, குறைந்தது அந்த இந்தியா தேசியம் குறித்த கட்டுரையை வாய்ப்புள்ளோர் வாசித்து பார்க்கலாம்

25-1-2025

jan 26

ரா அ பத்மநாபன் தான் பெயர் வைத்தார், 'புதுவையில் தேசபக்தர்கள் ' என்று அந்நூலுக்கு. 1908-20 ஆண்டுகளில் பாரதியை, வ வே சு வை, அரவிந்தரை அருகில் இருந்து பார்த்து , அவர்களுடனான சுவைமிகு-இன்னல்மிகு தருணங்களை -இதில் இடம் பெற்றுள்ள செய்திகள் பேசுகின்றன.

இதில் மூவரைப் பற்றியும் ஓரளவு விரிவாக பேசியிருப்பவர் என். நாகசாமி. சுந்தரேசய்யர், மண்டையம் ஸ்ரீநிவாச்சாரியார், யதுகிரி என பிறர் தரும் செய்திகளுமாக, 160 பக்கத்தில் 1966 ல் இந்நூலை அப்போது கொணர்ந்துள்ளனர். ரா அ ப அவர்கள்தான் முகவுரை என சிறிய அளவு எழுதியுள்ளார். ரா அ ப முகவுரையில் 1966ல் நாகசாமிக்கு 80 வயதாகப்போகிறது என்கிற செய்தி கிடைக்கிறது.

நாகசாமி மூவரை பற்றியும் சாதாரண மனிதர்களின் ஆசை அபிலாசைகளுடன், புதுவையில் வந்தேறிகளாக, போலீஸ் தொல்லைகளுக்கு இடையில் , பாரதி- வ வே சு- அரவிந்தர் எப்படி தினசரிகளை செய்து வந்தனர் என்பதைச் சொல்கிறார். அல்லயன்ஸ் பதிப்பகம் இந்நூலை திரும்பக் கொணர்ந்தார்கள் என அறிகிறேன்.

புதுவை சார்ந்து பிரிட்டிஷ் இந்தியா தேச பக்தர்கள் அங்கு செயல்பட்ட தன்மைகளையும் அவர்களின் தனிப்பட்ட குணங்களையும் பேசுகிற நல்ல ஆவணமிது. என்.நாகசாமி வேறு நூல்களை எழுதியுள்ளாரா, அவர் குறித்து நூல் எவராவது எழுதியுள்ளனரா என எனக்குத் தெரியவில்லை. நாகசாமி பதிவின் நிறைகுறைகளை பற்றி ஆய்வாளர் எவராவது பேசியிருந்திருக்கலாம், எனக்குத் தெரியவில்லை.

நாகசாமியின் பாரதி குறிப்புகள் 60 பக்க அளவிலானதே. நாகசாமியிடமிருந்து சில செய்திகளை இங்கே தருகிறேன்.

பாரதியை ராஜாஜி பார்க்க வருவதாகச் சொல்லி வராமை.பின்னர் சந்தித்தது.

ஸ்ரீநிவாச்சாரியார்(யதுகிரி தந்தை) தங்கையின் கணவர் ரெங்காச்சாரியார் 'இந்தியா' நிர்வாகம் எடுத்த நிலையில் ஏற்பட்ட முரண் காரணமாக பாரதிக்கு உதவ வந்திருந்த சுப்பையா எட்டயபுரம் திரும்புதல்- ஹரிஹர சர்மா காந்தியின் தோழர் பி ஜே மேத்தாவிடம் ரங்கூன் சென்று- அவர் அறிவுரையுடன் சபர்மதி திரும்புதல்- காந்தி அவரை தென்னக இந்தி பிரச்சாரத்திற்கு அனுப்புதல். ரெங்காச்சாரி

பாரதி முரண் வாக்குவாதம் முற்றி அவர் பாரதியை அடிக்கச் சென்றது- நாகசாமி தடுத்தது- இந்தியா பத்திரிகையிலிருந்து பாரதி வெளியேறி

- 'சூரியோதயம் ' தொடங்கியது என செய்திகள் தரப்பட்டுள்ளன.

ஸ்ரீநிவாச்சாரியார் 'விஜயா ' தொடங்கி அந்த தினசரிக்கு பாரதியாரை அழைத்துச் சென்றது சொல்லப்பட்டுள்ளது.

பாரதிக்கு அபின் கஞ்சா லேகிய பழக்கம் உருவானது மெலிதாக பேசப்பட்டுள்ளது.

பாரதியிடம் தஞ்சை வக்கீல் ராமசாமி அய்யர், நாகசாமிக்கு உங்கள் புதல்வியை மணமுடியுங்கள் என்றது- பொருளாதார சிரமம் நீங்க அது வழி என்றது. செல்லம்மாள் விரும்பவில்லை. ஆதலால் குழந்தைகளுடன் கடையம் சென்று வர பாரதியிடம் தெரிவிக்க, பாரதி நாகசாமி ஜவுளி கடைக்கு வந்து, செல்லம்மாளுக்கு மாற்று புடவை வாங்கிச் சென்றது- ஒரு மாதமாகியும் செல்லம்மாள் வரவில்லை- பெண்ணிற்கு விவாகம் முடித்த கடிதத்தை பாரதி நாகசாமியிடம் காட்டுவது என காட்சிகளாக நகர்கிறது.

எப்போதும் வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு புகையிலை- போட முடியா நேரத்தில் அப்படியே சுருட்டி பையில் வைத்துக்கொண்டு போவது- சீட்டு ஆடினாலும் ஞாபகம் விளையாட்டில் இருக்காது- குளிக்கும் போதும் நீர் உடல் நனைய விழாது. தாடியில் நீர் சொட்ட சொட்ட முழுமையாக துடைக்காமல் வேட்டி சட்டை மேல் கோட்டு அணிவது என பாரதியின் சிறு விஷயங்களில் கவனப்படா , பெரும் ஞான உலகு விரிகிறது.

நீச்சல் அடிக்கத் தெரியாமல் அவ்வப்போது தட்டுத் தடுமாறி பிறரால் இழுத்து காப்பாற்றப்படுவது- நெய் தோசை, ரவா தோசை- சர்க்கரை தொட்டு பிரியமாக ஹோட்டலில் சாப்பிடுவது- நிலாச் சோறு எனில் மகிழ்ச்சி. காலாற சென்றால் பேசிக்கொண்டு மாகாணி பட்டாணியை தின்றுகொண்டே நடப்பது. அவ்வப்போது பிரிய நண்பர்களுடன் திராட்சை ரச பானம்- விவாதங்கள்- அப்படியே கடல் மணலில் துயில்- பத்திரிகா அலுவகம் எனில் பேப்பரை விரித்து போட்டு, அதையே கட்டாக தலைக்கு வைத்து நிம்மதியாக தூங்குவது. சாப்பிடும் போது சோற்றை சிதறிக்கொண்டே சாப்பிடுவது. மீசை தாடி புசித்துவிடும். சாப்பிடும் போதும் கவனம் இராது என அவரின் மனோ உலகின் சஞ்சாரம் சித்தரிக்கப்பட்டுள்ளது.

வ உ சி பார்க்க வந்து  புதுவையில் பாரதி , நாகசாமி மற்றவருடன் மூன்று நாட்கள் தங்கி , விருந்துண்டு சென்றது.

பாரதியிடம் இரகசியம் தங்காது என்பதால் ,  வ வே சு வாஞ்சிக்கு துப்பாக்கி  பயிற்சி கொடுத்தது உட்பட அவரிடம் மறைக்கப்பட்டது. வாஞ்சி உயிரை தியாகம் செய்யத்தயராக இருந்த செய்தி பாரதிக்கும் அரவிந்தருக்கும் தெரியாது. நீலகண்ட பிரம்மச்சாரி போலீஸ் உளவாளி என நாகசாமி அவரை வெளியே அனுப்பியது போன்ற பலவற்றை நாகசாமி இந்த 60 பக்கத்தில் நினைவு கூர்ந்துள்ளார்.

பாரதிக்கு எதுவும் நினைத்த நேரத்தில் முடியவேண்டும். இல்லையேல் அதைப் பற்றியே பிரஸ்தாபித்துக்கொண்டிருப்பார். ஆங்கில கட்டுரைகளை படித்துவிட்டு வைத்து விடுவார். கிராமபோன் ரிகார்டு போல் மனதிலிருந்து சரியாக  தமிழ் படுத்திவிடுவார். இந்து பத்திரிகை அவர் எழுதுவது சற்று காரமாக இருக்கிறது என மாற்றி பிரசுரித்தது. அப்படியே போடு, இல்லையேல் எழுத மாட்டேன் என அவர் இந்துவில் தொடர்ந்து எழுதவியலாமல் போனது.( சுந்தரேசர் தகவல்)

ஓம் சக்தி ஓம் சக்தி என எப்போதும் பரவச உச்சரிப்பு செய்வது- குறளையும்  நாலாயிர பிரபந்தத்தையும் கையில் கொண்டிருப்பது சொல்லப்பட்டுள்ளது.

நாகசாமி வ வே சு பற்றியும் , அரவிந்தர் பற்றியும் அவர் நினைவுகளை இந்நூலில் கொஞ்சம் சொல்லியுள்ளார்.  தமிழர் தெரிந்து கொள்ள வேண்டிய எளிய செய்திகள் நிரம்பிய நூல்

26-1-2026 குடியரசு தின வாழ்த்துகள்!

feb 28

இரு நூல்கள் ஜனவரியில் என்னை ஆக்ரமித்திருந்தன எனச் சொல்ல முடியும். அதாவது தினம் ஒரு மணி நேரமாவது , இந்த நூல்கள் எடுத்துக்கொண்டன. இரண்டும் அளவில் மிகப்பெரிய நூல்கள். நோட்ஸ் பகுதியும் சேர்த்தால் ஒன்று 950 பக்கங்கள், மற்றது 675 பக்கங்கள்.

வரலாற்றாய்வாளர், ஏராள நூல்களின் ஆசிரியர் ராமச்சந்திர குஹாவின் 'Revised Updated India After Gandhi A History' 2023ல் , அப்டேட் செய்யப்பட்ட நூல். 1947- 2022 காலத்தின் இந்திய அரசியல் நிகழ்வுகள் போக்குகள், ஆட்சி அதிகாரம்- நடவடிக்கைகள், கலவரங்கள், போராட்டங்கள் போன்ற பல்வேறு அம்சங்களை 'லீனியராக' கால வரிசைப்படி அடுக்கிச் செல்கிற நூல். ஆங்காங்கே ஓரிரு இடங்களில் conceptual feelingயை உணர முடியலாம். மற்றபடி வேறு ஆழத்தை என்னால் உணரமுடியவில்லை.

A good detail- narration of events, periods எனச் சொல்லலாம். இன்னும் சொல்லப்போனால், 75 ஆண்டுகால விடுதலை இந்தியாவின் நியுஸ்பேப்பர்களின் முதல் பக்க செய்திகளையெல்லாம், சுருக்கமாக சேர்த்து படித்தாற் போன்ற உணர்வை பெற முடிந்தது. இதனால் குஹாவின் உழைப்பை நான் குறைத்து மதிப்பிடவில்லை. பேய் உழைப்புத்தான். ஆனாலும் கல்லூரிக்கான பாடப்புத்தகம் போன்ற உணர்வை என்னால் தவிர்க்க முடியவில்லை. ஒருவகையான நாட்குறிப்பு வகை வரலாறாக என்றும் சொல்லலாம். என் வாசிப்பு அனுபவம் அவ்வளவே. வாசித்தவர்க்கு, வாசிக்க போகிறவர்களுக்கு வேறு அனுபவம் கிடைக்கலாம்.

அடுத்த நூல் 2024ல் வந்த மிக முக்கியமான நூல். ஆய்வாளர் , பல நூல்களின் ஆசிரியர் ஆனந்த் டெல்தும்டேவின் ' A Reflective Biography of Dr Ambedkar Iconoclast'. அம்பேத்கர் தன் வாழ்நாளில் எழுத நினைத்த நூல்களின் ஒன்று காந்தியின் சரிதை. காந்தி குறித்த புகழ்பாடல் நூல்களிலிருந்து மாறுபட்டு ஒன்றை விமர்சன பார்வையில் அவர் எழுத நினைத்திருக்கலாம். வரலாற்றின் விதி அம்பேத்கரின் சரிதைகள் பலவும் அவரின் புகழ்பாடலாகவே அமைந்த ஒன்றைக் காட்டியது.

அம்பேத்கர் ஆய்வாளர்களில் சிலர் critical Appreciation என்றவகையில் அவரின் சரிதையை சொல்ல முன் வந்துள்ளனர். இந்த அனுபவத்தை டெல்தும்டே தனது இந்த பெரும் ஆய்வு நூல் வழியே கிடத்தியுள்ளார் . இடைவெளிகள் இல்லாமல் இல்லை. விடை தெரிய வேண்டிய

கேள்விகள் இருக்கின்றன. டெல்தும்டே துணிச்சலாக அம்பேத்கர் அவர்களிடம் காணப்பட்ட சில முரண்களை குறைகளை இந்நூலில் கொணர்ந்துள்ளார். அவரின் குணாதிசயங்கள் சிலவற்றை நாம் இந்நூல் வழி காணமுடியும்.

தமிழகத்தில் நிச்சயம் நூறு பேராவது ஆங்கிலத்தில் முழு நூலை படித்திருக்கக்கூடும் என நினைக்கிறேன். தமிழ் மொழிபெயர்ப்பு குறித்து இன்னும் நான் தெரிந்துகொள்ளவில்லை. தமிழில் வெளிவந்து பரவலாக செல்லும் என்றால் ஓரளவு விவாதங்கள் நூலை ஆதாரமாகக் கொண்டு எழலாம். ஆங்கிலத்தில் சில மதிப்புரைகள் வந்துள்ளன. அசோக் கோபால் 2024 நவம்பர் இறுதியில் தேர்ந்த மதிப்புரையை எழுதியிருந்தார். டெல்தும்டே நூல் விவாத வெளி நிறைந்த நூல். ஆனந்த் டெல்தும்டே Iconoclast ஆக இந்நூலில் தெரிகிறார். ஆற்றில் எறிந்த கல் நிலைமை ஆகாமல் இருக்க வேண்டும்.

28-1-2025

feb 28

8th CPC TOR and our bsnl case

DOPT vide its 6/1/2025-JCA sent a request to the secretary staff side on 23rd Jan 2025, for their suggestions regarding TOR, the one to be finalised for constituting 8 th CPC.

The GS of AIBSNLPWA of the bsnl absorbed pensioners association has made his appeal to the DOPT, and to Secretary National JCM and others to take up the case of absorbed pensioners ,by getting the same included in the TOR. The appeal is

" To examine the principles which should govern the structure of pension and other retirement benefits, including revision of pension in the case of employees who are getting pension on IDA from central civil estimate and covered under CCS pension Rules 2021"

It is a good initiative, as the association is continuously pursuing the case of 7th CPC fitment, now trying its level best to enter into the TOR. The intention is fine. No one can blame that. But questions are there about this request.

The constitution of CPC is basically for the Central Govt employees to examine their CDA pay related principles including allowances, bonus, promotion etc- also to examine the CG Retirees' pension revision issue on 1-1-2027.

37 A is created as an amendment to CCS pension rules, purely for the employees , transferred from the govt department and absorbed as employees in a PSU. The sub rules of 37 A speak fully for the employees and for their safeguards, as they are absorbed in a different entity viz PSU.

For BSNL absorbed employees- note employees , special provisions were made in the 37 A rules. It speaks about pension as per Govt formula and assures the authority as GOI , the paying authority, from the consolidated fund of India obtaining through DFG, instead of any pension fund kitty. Thanks to com Gupta's wisdom. It also assures to maintain parity for the absorbed employees in the govt rules , for the pension related benefits ( like gratuity , commutation, qualifying service, age related enhanced pension, FP etc) with those employees of CG retiring as on the date. The assurance of parity in the 37 A rules is for employees only , not for the pensioners retired on availing this rules. Note it is all for the absorbed-employees only.

Ok. The pensioners association is asking to examine the issue of pension related issues for the employees getting pension on IDA. Though the date 'as on ' is not mentioned, it cannot be except the date of 8 th CPC- 1-1-2026. This means to examine the pension related issues including revision of pension of those absorbed bsnl, mtnl retired upto 31-12-2025.

Again the same question may crop up, what would the fate of employees getting pension on IDA, retiring on or after 1-1-2026. There is no mention of this as we decode

the request of the association in their demand for TOR. No BSNL union asked till date , any such demand of inclusion of pay related issues of absorbed employees getting pay on IDA for the inclusion in the TOR. It is not possible even any demand comes from any union, as the demand may be construed illogical.

Com O P Gupta tried to push the demand of 'pensionable pay', when some DOT officers suggested the same to him. Unfortunately almost all the leaders of NFTE objected that, and Guptaji could not pursue it beyond that suggestive level. He tried in 2003 also , but govt side not accepted his contention, in the case Sep 2003 applicability . He tried for a separate 'pensionable pay' for employees absorbed which is more or less similar to CPC pay, though the last pay drawn may be higher in IDA. All his trails were for the employees only in the route of 'pensionable pay'. Com Gupta did his best with the understanding to fix pay for pension, though the employees go with their IDA pay.

The same was pursued by the AIBSNLPWA leadership also but in a different way like conversion formula to CDA from IDA for pensioners after their pension fixed in IDA. Their efforts and trails are for pensioners. This was yet to be realised. The concept of pension linked to pay is not properly felt in these trails.

The most important question is 'whether the absorbed 4 lakh employees in BSNL is one class- a flock together or not ?'. If so how two different path - one by employees union pursuing pay revision , the other by pensioners union for pension revision - can be adopted?.

Both CG employees and CG pensioners are pursuing the same route of CPC- now 8 th CPC for their pay and pension revision as on 1-1-2026. Their pay structure is the same for both fixation of pay and fixation of revised pension. In our case, can we go in two different directions one for employees - PRC, the other for pensioners- CPC - in two different principles and structures?

As long as there is a category of post pensioners of DOT after that particular date- employees of bsnl on that particular date, our case is not similar to that one of CG employees and pensioners. This point needs to be taken care of when we draft a demand. What is pensionable pay is the question to be addressed for both employees to fix and pensioners to revise.

28-1-2025 11 hrs R. Pattabiraman

jan 30

They said so in 1939 about Mahatma Gandhi on the eve of his aging 70 years

Dr RadhaKrishnan

Since Buddha, Gandhiji was the greatest moral force in Indian history. For the accomplishment of liberty,justice and peace, he discovered the old techniques of Ahimsa and Satyagraha. He revealed to the masses not the power of guns, but the power of innate in each individual, a power which this war haunted world can exploit fully in making wars impossible. Gandhiji's whole life was an experiment with truth. ..His simplicity of manner was captivating. His devotion of duty was inexhaustible, sincerity of purpose infallible and sense of humour irresistible

Sir Mirza M Ismail

(Gandhiji) He is the eternal enigma of India. A man do rare moral elevation, of unimpeachable private life, of transparent sincerity of conduct and of a strongly religious bent of mind, he recalls to our mind great spiritual leaders and saints. On the other hand, as the inspiring leader of a resurgent India who has given Indians a new spirit, a sense of self respect and a feeling of pride in their civilisation, he is something more than a mere politician. He is a great statesman, a man of vision

Albert Einstein

Gandhi is unique in political history. He has invented an entirely new and humane technique for the liberation struggle of an oppressed people and carried it out with the greatest energy and devotion. The moral influence which he has exercised upon thinking people through the civilised world may be far more durable than would appear likely in the present age, with its exaggeration of brute force. For the work of statesmen is permanent only in so far as they arouse and consolidate the moral forces of their peoples through their personal example and educating influence. We are fortunate and should be grateful that fate has bestowed upon us so luminous a contemporary- a beacon to the generation to come

Earnest Barker

I should celebrate in Mr Gandhi the man who could mix the spiritual with the temporal, and could be at the same time true to both. ..I should say that Mr Gandhi had laboured to teach his countrymen, and helped to teach the world at large, three things- to work in love and for love, to work without violence, and to work with the hands and not merely with the brain, for building of a full life which fully engages the faculties